உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கடம்பவனபுராணம்.

தொண்டைமண்டலத்து

இலம்பூர்

**வீமநாதபண்டிதர்**

இயற்றியது.

---

இஃது

சிதம்பரம்

வாமதேவ

## முருகபட்டாரகரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து,

சென்னபட்டணம்:

வித்தியாவர்த்தனி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விக்கிரம ௵ ஆடி ௴

---

இதன் விலை ரூபா [illegible]



2-3-0

உ

கணபதிதுணை.

# வீமநாதபண்டிதர்

## சரித்திரச்சுருக்கம்.

தொண்டைமண்டலத்திலே, புழற்கோட்டத்திலே, இலிம்பூரிலே கங்காகுலத்திலே, தென்னவராயர்மரபிலே நெய்தனிலத்துப் பொருட்செல்வத்தோடு மிகுந்த கீர்த்தியைப் பெற்ற தம்முடைய தந்தை தாய் இருவர்களுஞ் செய்த அரிய தவத்தினலே, வீமநாதபண்டிதர் என்பவர் அவதரித்து, உரிய பருவத்திலே, கல்வி கற்கப் புகுந்து, சின்னளிலே வடமொழி தென்மொழி என்னும் இவ் விரண்டு பாஷையினு மிகுந்த வல்லவராய், சிவதீக்ஷைபெற்று, உபய பாஷாப் பிரணீதங்களாகிய பொதுநூல்களையும், சைவ சமய நூல்களையும் ஐயந் திரிபு அறக் கற்றுணர்ந்து, அவற்றின் மெய்ப் பொருளாவார் சிவபெருமானே என்று, தெள்ளிதிற்றுணிந்து கொண்டார்.

அவருக்குத் தம் மரபின் பெயராகிய தென்னவராயர் என்னுங் காரணத்திருப்பெயருக்குரிய மதுரைச் சொக்கநாத சுவாமியைத் தரிசிக்க வேண்டும் என்னும் பேரன்பு தலைப்பட்டது. படவே, மதுராபுரிக்குச் சென்று, பொற்றாமரை முதலிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ் செய்து, சித்திவிநாயகரை வணங்கி, மீனட்சியையும் சொக்கநாத சுவாமியையும் தரிசித்து, துதித்து, வணங்கிப் பேரானந்தப் பெருங்கடலிலே அமிழ்ந்தி நின்றார்.

அவருடைய ஸ்தோத்திர சடிலத்தையும், பத்தியையும், அத்தியந்த விநயத்தையும் அறிந்து ஆச்சரியமுற்ற அவ்வாலயத்து அர்ச்சகர்களும் அந்தத் தலவாசிகளும் அவரை நோக்கி "நீர் இந்தத் தலபுராணமாகிய வடமொழிக் கடம்பவன மான்மியத்தைக் கேட்கும், உபய பாஷா சாஸ்திரப் பிரவர்த்தக வித்துவான்களின் செவிகட்கு அமிர்தமாக இருக்கும் வண்ணம் தமிழிலே விளக்கமாகப் பாடிமுடியும்" என்று, ஆஞ்ஞாபித்தார்கள்.

வீமநாதபண்டிதர் அவ் வாஞ்ஞையைக் கைக்கொண்டு, அந்தத் தலத்திலேயே வசித்திருந்து, சொக்கநாத சுவாமியின் திருவருளை முன்னிட்டு, அப் புராணந் தமிழினாற் பாடத் தொடங்கி, அப் புராணத்திற்குக் கடம்பவன புராணம் என்னும் வடமொழிப் பெயரையே பெயராகத் தந்து, அதனைப் பதினோரத்தியாயமாகப் பாகுபாடு செய்து, அவ் வத்தியாயங்களுள்ளே இலீலாசங்கிரகவத்தியாயத்தில் மதுரைத் தலவிசேடமும், புறத் தொட்டி நின்மாலிய தீர்த்தமகற்று நரகசேடானுபவ வியாதிகளும், சிவபெருமானுக்கு அற்புதமாகிய விபூதி உருத்திராக்கம் பஞ்சாக்கரம் சிவநாமம் சிவவிரதம் சிவபுண்ணியம் சிவபுராணம் சிவத்துரோகம் சிவபூசை குருமகத்துவம் என்னும் இப்பத்தும், இவற்றுள் விபூதி உருத்திராக்கங்களில் விசேடவிதியும், சிவபூசையில் சிவலிங்கஇலக்கணம் பிரதோடம் பிரதோடவிரதம் பிரதோடபூசாகாலநிண்ணயம் பிரதோடபூசை பிரதோடவிரதோத்தியாபனம் என்பனவும், குருமகத்துவத்தில் சீடரிலக்கணம் சிவனடியாரிலக்கணம் துறவியரிலக்கணம் மகேசுரவடிவம் என்பனவும், ஏனையத்தியாயங்களுள் இடையிடையே விதிவிலக்குக்களும், அவற்றின் பலங்களுமாகிய இவைகளையமைத்து, நோக்குவார்க்கு நோக்கும் இடங்களிலெல்லாம் சொற்சுவை பொருட்சுவை முதலியன கிடந்து களிப்புச் செய்யும்வண்ணம் பாயிரத்தோடு விருத்தயாப்பினால் விளக்கமாகப் பாடி முடிவுசெய்தார்.

பின்பு அத்திருப்புராணத்தை ஓர் அர்ச்சகரைக்கொண்டு சொக்கநாத சுவாமியின் சந்நிதியிலுள்ள அறுகாற் பீடத்திலே எழுந்தருளப்பண்ணி, விதிப்படி அருச்சனை பண்ணுவித்து, திருமுன்னே விழுந்து நமஸ்கரித்து, துதித்து, இருந்துகொண்டு, அங்குவந்திருக்கும் உபய பாஷாப் புரோக்த சைவசித்தாந்த சாஸ்திரிகண் முதலாயினோர் யாவருங் கேட்கும்படி தாமே வாசித்து, பொருள் சொல்லி அரங்கேற்றினார்.

---

# சூசிபத்திரம்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# கடம்பவனபுராணம்.

காப்பு.

நிலம்போற்று மகத்தியன்முன் னிகழ்த்தியவிக் கதைக்கியறேர்
நலம்போற்றுந் தமிழ்வாக்கு நமக்கருள்செய் திடத்தேவை
வலம்போற்றிப் பலங்கவருஞ் * சித்திவிநா யகனைமழைக்
குலம்போற்று மதிற்கூடற் கோமகவை வணங்குவாம்.

பாயிரம்.

## கடம்பவனசுந்தரர்.

திருவோங்கு பேரொளியாய்ப் பராற்பரமாய்ச் சிவமாய்ச்சூக் குமமு மாகி, யருவோங்கு மனுபவநித் தியநிமல மானசதா சிவமு மாகி, யுருவோங்கு தொழிற்படுமன் னுயிர்க்குயிரா மமுதலிங்க வுருவாந் தொன்மை,மருவோங்கு மலர்க்கடம்ப வனத்தமர்சுந் தரன்றுணைத் தாள் வழுத்தல் செய்வாம். (க)

காண்மாறியாடியவர்.

சிவமாகிச் சத்தியாய் நாதவிந்து வாய்ச்சதா சிவமு மாகி
நவமாரு மகேசனுருத் திரனெடுமா னுன்முகன்மற் றியாவு மாகித்
தவமாரு மிரசிதசிற் சபையில்வலத் தாண்மாறித் தையல் காண
வுவமான மின்றிநிருத் தம்புரியும் பேரொளியை யுளத்தில் வைப்பாம்.

* "தேவை வலம் போற்றிப் பலங் கவரும்" என்றது—'ஞானஒளிவடிவினராகியசிவபெருமானை (இடங் கொண்ட பூமியாக) வலம் வந்து கனியைக் கவர்ந்த' என்று பொருள் கொள்ளப்படும்; இப்பொருள் கோள் கல்லாடத்திலே விநாயகர் வணக்கத்திலே "கருமிடற்றுக் கடவுளைச் செங்கனி வேண்டி,யிடங்கொண் ஞாலத்து வலங்கொளும் பதத்த" என்னும் மூலத்தானும், 'சிவந்த கனியினை விரும்பிக் கரிய மிடற்றினையுடையகடவுளை யிடங்கொண்ட பூமியாக வலங்கொள்ளும்,பதத்தினையுடையாயென்க' என்னும்அதன்உரையானும் உணர்ந்து கொள்க.

அங்கயற்கண்ணம்மை.

நாதவந்து வாயோக போகசத்தி யாகிக்கா ரணநான் காகி
யோதுசதுர் வியூகியாய்ப் பின்னமாய்ப் பரையாயுன் மனியு மாகி
யேதமறு வீரசத்தி யாய்ப்பலவாய் மேலாகு மெம்பி ராட்டி
யாதிமது ரேசர்பங்கி லங்கயற்க ணம்மைபத மகத்துள் வைப்பாம்.

விநாயகர்.

கதத்தானை நீண்டகுர கதத்தானை யிராவணனைக் கடிந்தோன் காணுப், பதத்தானை முதலினர்முற் பதத்தானை வெள்ளையிபப் பாகன் போற்று,மிதத்தானைப் பொறியிலர்கட் கிதத்தானைக் கடம்பவனத் திருக்குந் தேவை,மதத்தானை முகனைவென்ற மதத்தானை முகத்தானை வணக்கஞ் செய்வாம். (௪)

சுப்பிரமணியர்.

மருளாரும் பவத்தொடரை மாற்றியதென் னன்மகளாய் மவுலி சூடிப், பொருளாரும் புவிவிசயஞ் செய்தரசு செலுத்தியமும் முலைப்பூந் தேனைத், தெருளாருந் தமிழ்மதுரை நாதன்மணஞ் செயவிதிநூற் சடங்கு செய்தே, யருளாருங் கடம்பவனத் துறைகுமர குருபரனை ‡ யகத்துள் வைப்பாம். (௫)

வைரவர்.

கருதரிய லளிதபர னெற்றியிற்றோன் றிச்சூல கபால மேந்தி, வருபிரமனை யஞ்சுவற்றிப் பயிரவனு யண்டத்து வங்கண் மாற்றி, யரிசரும கஞ்சுகியாய் வேதவெகி னூர்ந்துமுன்போ லவையுண் டாக்கி, யிருமைபெறக் காத்தருளுங் கேத்திரபா லன்றிருத்தா ளேத்தல் செய்வாம். (௬)

திருநந்திதேவர்.

வாங்கருமா தவவடிவாஞ் சிலாதமுனி மகவாகி வளர்ந்தெட் டாண்டிற், பாங்குறுமா தவம்புரிந்து பரனுருநித் தியத்துவமும் பண்பா

‡ குமரகுருபரன் மும்முலைப் பூந்தேனைத் தெருளாருந் தமிழ்மதுரை நாதன் மணஞ் செய விதிநூற் சடங்கு செய்தது வேப்பத்தூரார் திருவிளையாடற் புராணத்திலே, திருமணஞ்செய்ததிருவிளையாடலிலே "ஆதிநான் முகன்மா லேத்த வரம்பையர் வாழ்த்தெடுப்பச்,சோதிசேர் கானம் பாடத் தும்புரு நார தாதி,நீதறு சடங்கு மைந்தன் செலுத்தநன் முகூர்த்தத் தொப்ப, மேதகு மாதை வேத விதிப்படி மணஞ்செய்தான்." என்னும் இருபத்தாருஞ் செய்யுளால் உணர்த்தப்பட்டது.

ற் பெற்றே, யோங்கயில்வண் சுரிகைபிரம் புழைமழுநம் மீசனுவந் துதவச் செங்கை, தாங்கிநெடுந் தடங்கயிலை காத்தருணந் தீசர்பதந் தலைமேற் கொள்வாம். (எ)

சமயகுரவருண்மூவர்.

அடலமணைக் கழுவேற்றுந் திருஞான சம்பந்த ரடிகள் போற்றி, கடலிடைக்கற் றூண்மிதப்ப வோதுதமிழ்க் கடலினடிக் கமலம் போற்றி, மடலவிழ்பூங் குழற்பரவை வாசலினம் மிறையிருதாள் வருந்த மீண்டுந், தொடர்வருந்தூ தெனவிடுத்த சுந்தரன்பொற் றுமணாயாந் துணைத்தாள் போற்றி. (அ)

திருவாதவூரடிகள்.

திருந்துகுருந் துறைகயிலைத் துவாதசாந் தேசன்றுட் டேசன் பின், பெருந்துறைவா ரிதிபடிந்து ஞானநீர் முகந்தகம்பேர்த் திடித்து மின்னி, வருந்துமுல குயிர்ப்பயிர்கள் பவக்கோடை யால்வெதும்பி வாடா தோங்க, வருந்தமிழ்வா சகமழைபெய் தருள்வாத வூர்முகிலை யகத்துள் வைப்பாம். (கூ)

சண்டேசுரநாயனார்; சங்கப்புலவர்; மூர்த்திநாயனார்முதலியோர்.

சைவசம யம்வளரத் தந்தைதா ளெறிந்தசண்டீ சனருள் போற்றி, பைவளர்பாம் பணிபரனைப் பாடியசங் கப்புலவர் பாதம் போற்றி, மைவளர்கந் தரனணியுஞ் சந்தனமுட் டியதென்தன் வண்கை தேய்த்துத்,தெய்வமது ரைப்பதியாண் மூர்த்திமுத லனைவரையுந் தெரிசிப் போமே. (கo)

சுந்தரசாமந்தர்.

தந்திரமார் படைகூட்டென் றரசுதரு பொருட்கிறைநீ மெய்க் காட் டென்று, வந்தரனு ரடியாரை யமுதுசெய்வித் தவர்புசித்த சேடம் வாங்கி, யிந்திரன்மா லயனிவர்க்குங் கிட்டாவிப் பிரசாத மெனத்தா னுண்டு, சுந்தரனுர் தாளடைந்த சுந்தரசா மந்தனடி தொழுது வாழ்வாம். (கக)

சிவபத்தர்.

கருவனந்த யோனிகளிற் புகுந்துழன்று பல்லுயிருங் கவலா வண்ண, மருவனந்தஞ் சூழ்கடம்ப வனத்திருந்து மற்றையமெய்த் தலங்க டோறு, முருவனந்த மெடுத்தகலை யொன்றாகித் தானுகவுதவுஞ் சொக்கைத், திருவனந்தன் முதற்காலங் களிற்பணியும் பத்தர்பதஞ் சிரமேற் கொள்வாம். (கஉ)

## வாழ்த்து.

வேதமா முனிவர் வாழ்க விளங்குமா னினங்கள் வாழ்க
பூதனா யகன்மெய் யன்பர் பொலிந்துசூழ் மதுரை வாழ்க
மீதமும் மாரி பெய்து மலிவளஞ் சுரப்பச் சொக்க
நாதனெங் கடவுட் டொன்னூ னலம்பெறப் பொலிக மாதோ. ()

## முதனூல்வழி.

இறைவனந்திக் கருள்புரிய நந்திசனற் குமாரனுக்கங் கியம்ப வன்னோ, னிறைதவத்து வியாதமுனிக் குரைக்கவவ னெடுந்தவத்துச் சூதற் கோத,மறைபுகலுஞ் சூதமுனி நைமிசா ரணியமுனி வரர்க்குக் கூறு, முறைதெரிந்து நிறைவுதரு நீபவன மான்மியம்யான் மொழிய லுற்றேன். (கச)

## நூல்செய்யத்துணிதல்.

திருந்துபுகழ்ப் பரஞ்சோதி மாமுனிவன் சிவனருளாற் செப்புமெண்ணெண்,பொருந்திவளர் திருவிளையா டற்புரா ணமுமிருக்கப் பின்னும் யானீர், தருந்தரணி புகழ்பதினோ ரத்தியா யத்தொர்வகை சாற்றப் புக்கேன்,மருந்தனையான் விளையாடற் கதையோதி யவையருளும் வழக்கான் மன்னோ. (கரு)

## நூல்செய்தற்குக்காரணமும், மொழிபெயர்த்தவிதமும்.

சீர்வளர்தண் கடம்பவன மான்மியமாம் வடநூலைத் தெருளு மன்பா,லேர்வளர்தென் மதுரையில்வா ழீசனைப்பூ சனைசெய்வோ ரியைந்த செல்வப், பார்வளர்ந்தோங் கியபுகழ்சேர் தலத்தோர்தென் மொழியாகப் பகரொன் றோத, நீர்வளர்பைந் தொடைவிருத்த யாப்பதனு லவரருளா னிகழ்த்த லுற்றேன். (கசா)

## அவையடக்கம்.

புதிய நன்மொழிக் கிள்ளையைப் பூவையைப் பயிற்றி
யதிச யம்பெறக் கேட்டக மகிழ்வரா தரிப்போர்
துதிசெ யுந்தமிழ்ச் சொக்கனுண் டருளிய தொடர்பின்
முதிய நாவலர் கொள்வரொன் புன்சொலு முறையால்- (கஎ)

## சிறப்புப்பாயிரம்.

பொன்னலர்பூங் கடம்பவன புராணந் தொன்னூற் பொதியமுனி யகத்தியன்முன் புகன்ற வாறே, பன்னுபுய கவிஞர்செவிக் கமுதமாகப் பரனருளின் செழுந்தமிழால் விளங்கச் செய்தான், றென்னவரா யன்புகழ்மாக் கண்ண னெய்தற் செல்வனுயர் தருமிலம்பூர் வீம நாத,

ன்னெறித்தேர் புராணமுழு துணர்ந்தோன் கங்கை நதிகுலவேள் பெருந்தொண்டை நாட்டி னுனே. (கஅ)

நூல்வரலாறு.

தெளிதரு தொன்னூ னெறியமு தொழுகு நாவின னுதற்றிரு நீற்ற, னொளிதரு மக்க வடம்புனை மெய்ய னுரகபூ டணனையெண் ணுளத்தன், றுளிதரு கண்ணீ ரானந்தப் பெருக்கின் றுன்மைமா தவனருட் டேய, னளிதரு குணத்துச் சூதமா முனிவ னயிமிசா ரணியத்தை யடைந்தான். (கக)

வந்தருள் சூத முனிவனை வழுத்தி மாதவ ராசனத் திருத்தித்
தந்துப சார வருக்கிய முதல தண்ணளி மாதவ வெமக்கு
முந்திய காந்தத் தியம்பிய கடம்ப வனபுரா ணக்கதை முழுதும் [வும்.
புந்திகூர்ந் தியம்பென் றிரந்திட வியாதற் போற்றியம் முனிவரன் புக

பதிகம்.

ஆதிமாதவவசிட்டன் முதன்முனிவ ரகத்தியனை யடைந்த வாறு
நீதிமா மறையாக மங்களுயர் நீபவன மான வாறுங்
கோதிலா வம்மறையா கமங்களுக்கு விரும்பும்வரங்கொடுத்தவாறுந்
தீதுதீர் தருதீர்த்த மகிமையிவை யெனவிரித்துச் செப்பு மாறும், ()

கனகவிர சிதவிரத்ந சபைகளிற்கண் ணுதனிருத்தம் புரியு மாறு
மனகனுறை பெருங்கயிலை யான்றசிவ லோகவள முரைதத வாறு
நனைகமழ்மென் மலர்க்கூந்த லம்பிகையெண் ணுன்கறமும் வளர்த்த
வினைகளற நாரணன்மாதவம்புரிந்துமிக்குவரம்பெற்றவாறும்.[வாறும்

பொய்யுரைத்த நான்முகனார் பூசித்துப் பொய்த்தோடம் போக்கு மாறு, மெய்யிலகு முருவாகி யீசனெண்ணெண் விளையாட்ல் புரிந்த வாறுஞ், சையகிரித் துன்மதவே டன்மதுரை யறியானத் தலத்தன் பர்க்குச், செய்துபகா ரங்கள்கிளை யோடுகெதி யடைந்ததும்யான் செப்ப லுற்றேன். (உரு)

தென்னவனாட் டினிலுயர்ந்த கதம்பவன மகிமையெவர் செப்பற் பாலா, ரன்னதன்சீ ரெடுத்துரைக்கி லாருரைப்பா ரால்வா யரனே வல்ல, னென்னினும்யா னறிந்தவா றவனருளா லியம்புகின்றே னினிது கேண்மின், றுன்னெறிமா தவத்தீரென் றவர்கேட்பக் கதை விரித்துச் சொல்வான் சூதன். (உச)

ாயிரமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உரு.

முதலாவது

## வசிட்டாதியரகத்தியனையடைர்தவத்தியாயம்.

பொங்கியமா தவவசிட்டர் புலகர்புலத் தியர்கண்ணுவர் பொருடேர் கர்க்க, ரங்கிராக் கபிலர்கவு தமர்கிருது பராசரரம் பரத்து வாசர், தங்கியசத் திபர்சுமந்துச் சயிமினிவர் வைசம்பா யனர்சு வாயுத், துங்கரிபுச் சோமரிய வக்கிரிதர் ககோளர்சொல்லுந் தீர்த்த பாதர். (க)

சத்தியமா தவர்விசுவா மித்திரர்சுகர் பிருகுவற்சர் தனக்கொப்பாகு, நித்தியமா மிருகண்டு மார்க்கண்ட ராய்க்கியவற் கியர்நன்னேயச், சித்திபெறு கலிகன்ம டநாசமுனி சிதேந்திரியர் வாமதேவர், பத்திபெறு சிவபாத விதயர்பதஞ் சலிமுனியம் புலிப்பொற் பாதர்.()

ஒருசடிலர் பிறங்குசிகா சடிலருயரிரும்புவனத்துள்ளோர் போற்றுந், திரிசடிலர் சட்சடிலர் சதசடிலர் திகழ்சருவ சடிலர் செவ்வே, வரிசடிலர் மிண்டியொளிர் முண்டிதரா யதிகளா வருமனேகர், விரிசடிலத் ததிசிமுதன் முனிவரர்மா தவத்துயர்ந்த மேன்மை பூண்டோர். (ங)

வேதாந்தஞ் சுருதிமிரு திகளுணர்ந்தோ திப்பொருளை விளங்கத் தேர்ந்து, நாதாந்தத் துட்பொருளி னுட்பொருளா மநாதிபரம் பொருளை நாடிப், பூதாந்தங் கீழ்ப்படமேற் றுவாதசாந் தத்தினிலே பொருந்தக் கண்டோர், காதாந்தத் தினுமழியா நீறணிந்து கண்டிகைமா லிகையும் பூண்போர். (ச)

கறுத்திடுங்கா மங்கோத முலோபமோ கமதமாற் சரியங் காய்ந்தே, வெறுத்திடுவோர் பொறையுடைமை மேற்கொள்வோர் விரும்புபெருந் தவத்தின் மிக்கோ, ரொறுத்திடுவெம் பவமகலச் சிவபத்தி பூண்டிதயத் துள்ளே நாளுங், குறித்துணர்ந்து சிவபூசை வேதாகமத்தடைவே கூர்ந்து செய்வோர். (ரு)

புகழ்ந்திடுமொன் மார்த்தலிங்கஞ் சுயம்புமுத லாமிலிங்கம் பூசை செய்வோர், நிகழ்ந்திடுதம் மிதயத்தில் விசேடித்து மானதபூசனை நேர்ந் துள்ளோ, ரகந்தெளிந்து சிவனடியார் யாரேனுஞ் சிவமெனும் பாவனையாக் கொள்வோர், மகந்தருமம் பிகையானை முகன்குகனிங் கிவர்பூசை வரம்பிற் செய்வோர். (சா)

இருக்கோலிட் டேத்திடப நந்திமுத லும்பர்கணத் தெவருஞ் சூழ்ந்த, திருக்கோலக் கோயில்வலஞ் செய்திலிங்க தெரிசனமே நியமமாகிக், கருக்கோல நீங்குசிவ தோத்திரங்கள் சிவநாமங் கருத்துட்

கொண்டே, பெருக்கோலிட் டுச்சரித்து நிலைபெறுவை திகசைவம்
பேணி வாழ்வோர். (எ)

பந்தமறு சிவஞான தீக்கையராஞ் சீடர்பல ரவர்க்குஞ் சீட, ரந்
தமிலா ரத்தகைய சீடரொடுந் திருக்கூட்ட மாகி யுள்ளோர், முந்து
தா சிவப்பொருளி னிலையுணர்ந்து சிவகதயை முழுதுந் தேக்குஞ், சி
ந்தையராய்ப் பரகதியீ தெனவிதிநா றெளிந்துகுரு பூசைசெய்வோர்.

இத்தகைய முனிவரரொண் ணுயிரவ ருங்காசி யடைந்தே மீளா
முத்திதரு மகிலேசன் றுள்வணங்கி முத்திமண்ட பத்தின் மேவு
முத்தமமா தவவடிவா மகத்தியனை யஞ்சலிசெய் துவந்து போற்ற
நித்தியமா மனைவரையுங் கைதொழுதாங் குடனிருத்திநேயங்கூர்ந்தே

வேறு.

இங்குநீ ரெய்த யான்முன் னெத்தவஞ் செய்தே னென்றா
னங்கவர் முனியை நோக்கி யியம்புவா ரருந்த வத்தோய்
கங்கைசூழ் காசி யீசன் கழல்பணிந் தேத்தும் பேறு
தங்கிய தெமக்கு நின்னாற் சாற்றுவ தினியொன் றுண்டால். (கo)

அருள்வடி வாகுஞ் சொக்க னுடிய வறுபா னுன்கு
திருவிளை யாட்ல் கேட்கும் விருப்பினேந் தெரித்தி யென்னக்
குருபர னருளை வாழ்த்திக் கூறினன் முனிவர் கோமா
னிருண்மல மகற்றுங் காதை முழுதுங்கேட் டின்ப முற்றார். (கக)

பரவச மாகிச் சொக்கன் பதமலர் தியானித் தேத்தி
யரவஞ்சூழ் தலஞ்சே விக்க வாசைமிக் குற்று ருற்ற
கரவறு கருத்தை யோர்ந்த கடமுனி கதம்பக் கானில்
விரவுமன் புடையே னென்னோ டேகுதிர் விரைவி னென்ன. (கஉ)

எழுந்தனன் வசிட்டன் முன்னாந் தவரொடு மீசன் வேணி
வழிந்திழி கங்கை மூழ்கி வரன்முறை நீறு சாத்தி
மொழிந்திடு மக்க மாலை முழுதுமெய் பூண்டு வேதம்
பொழிந்தமும் மதமார் சித்திப் புழைக்கைமா முகனைப் போற்றி. ()

ஆரணம் போற்றும் வார ணுசிசு ழுகில நாதன்
பூரணன் றுணைத்தாள் வாழ்த்திப் புவிமுழு துலகுக் கெல்லாங்
காரணந் தாளு யீன்றுங் கன்னியா யமலை யாகும்
வாரணி களபக் கொங்கை மனோன்மணி பதத்தை யேத்தி. (கச)

உளங்கெழு மன்பாற் காக்குங் கொற்றவை திருத்தா ளுன்னிக்
களங்கம தெழாது நீக்கும் வயிரவன் கமழ்பொற் கஞ்சத்

தளங்கெழு செய்ய பாதந் தலைக்கொடு வந்தற் சூழ
வளங்கெழு காசி யெல்லை வலங்கொடு வழிக்கொண் டானே. (கடு)

வேறு.

௳ தென்றிசை நடந்து சில்பகல் கழியச் சென்றனர் சீவன்முத் தீச
ன், மன்றலங் கடம்ப வனமெதிர் தோன்றக் கண்டனன் மலையமா
முனிவ,னென்றிய வன்பிற் பணிந்தருட் சொக்க னுறைந்தருள் கொ
டுக்குநற் றலமீ,தென்றலுந் தவத்தோ ரிறைஞ்சிவீழ்ந் தெழுந்தா ரே
த்தினர் கூத்துமா டினரால். (கசு)

ஆடியா னந்தக் கடல்படி பவரோ டரவஞ்சூ ழிரண்டியோ சனை
யா,நீடிய கதம்ப கானவெல் லையினை வலஞ்செய்தவ் வனத்தினு ணெ
டுமா,றேடிய பரமா வமிர்தரு பமதாய்த் திருந்துமைங் குரோசமு
ஞ் சூழ்போந், தேடவிழ் மலரிட் டேத்தியுள் புகுந்தே யிறைஞ்சின
ன் கோபுர வாயில். (கஎ)

ஆலயம் வலஞ்செய் தேத்தியுள் புகுந்தே யம்பொற்று மரைப்
புன லாடி, மாலயன் பரவு நீறணிந் தக்க மணிபுனைந் தஞ்செழுத்
தோதி, மூலமார் சித்தி விநாயகன் றுணைத்தாண் முளரிதன் சென்னி
யிற் சூடிப்,பாலினேர் மொழியங் கயற்கண யகியைப் பணிந்துபோ
ற் றினன்முனித் தலைவன். (கஅ)

கிளைத்தெழுங் கருணை வெள்ளத்தின் மூழ்கிக் கிளர்தரு மாதி
மூ லமதாய்,முளைத்தெழு மமுத சுந்தர விலிங்க மூர்த்தியைக் கண்டு
ளங் களித்தான், றிளைத்தெழுங் கண்ணீ ரானந்தம் பெருகத் திருமுன்
னர் வீழ்ந்துதாழ்ந் தெழுந்தே, விளைத்தெழும் புளகந் தோன்றிடத்
தொழுதான் மேன்மையைப் பன்முறை துதித்து. (ககூ)

உண்மகிழ் சிறந்தா னருள்சிவ பத்தி சீவன்முத் தியுமுட னடைந்
தான்,கண்மய முதவுஞ் சிற்சபை மூன்றுங் கண்டிறை திருநடந் தொ
ழுதா, னெண்மலி யன்பின் வணங்கியே வலஞ்செய் தியன்முனி மு
னிவர ரோடும், வண்மைசேர் திருமுன் றுறுகாற் பீடத் தேறினன்
வரன்முறை யிருந்தான். (உ0)

வேறு.

இருந்திறை யஞ்செழுத் தியல்பி னோதிய
வருந்தவத் தவரொடு மன்பு தோன்றிடத்
திருந்துபஞ் சாக்கரஞ் செபித்துச் சென்மநோய்
மருந்தெனுங் கடம்பமா வனத்தை யேத்தினன். (உக)

அத்தக வுணர்ந்தவ ரங்கை கூப்பியே
முத்தமிழ் முனிவரன் முகத்தை நோக்குறு
மித்தைதீர் கதம்பகா னத்தின் மேன்மையாஞ்
சித்திர மாக்கதை கேட்குஞ் சிந்தையேம். (உஉ)

சுந்தர னுடன்முன் ஞெருகுத்துச் சொற்றனை
வந்திடு கடம்பமா வனத்தின் வைபவ
முந்துதீர்த் தந்தல மூர்த்தி மான்மியம்
புந்திகூர்ந் தெமக்கினிப் புகலு வாயென்றார். (உங)

என்றவர் மீளவு மியம்பு வார்குணக்
குன்றமே கமலநின் குளிர்மு கத்தினி
னின்றும்வார் சிவகதை யமிழ்தை நெஞ்சுற
வொன்றிய செவிவழி யுண்டு தேக்கினேம். (உச)

தேக்கிய வெமக்கின்னுந் தெவிட்டிற் றில்லையான்
மீக்கொளு மாசைமேன் மேலு மென்றவர்
வாக்கினன் மொழிவது கேட்டு வண்டமி
ழூக்கமா முனிவர னுவகை யெய்தியே. (உரு)

வேறு.

சொக்கனரு ளாலிவைதொ குத்துரைசெய் வோமென்
றக்கணமு னித்தலைவ ருக்கருள்பு ரிந்தே
நக்கனையந் நாரியக லானைமுரு கோனைச்
சிக்கெனநி னைந்துறுதி யானமது செய்தான். (உசு)

செய்தலுமு யர்ந்திடவெ ழுந்ததிரு வாக்குப்
பைதலொழி வார்கள்சிவ பத்தரனை வோரு
மெய்துமிவை கேட்கவுரி யார்நம்முரு கேச
னுய்திறமு னக்குமுன்னு ரைத்ததுரை யென்றே. (உஎ)

இன்னவுரை கொண்டனனம் மீசனுரை யென்று
மன்னுதமிழ் மாமுனிம கிழ்ந்திதிதி குய்யந்
தன்னிகரின் மாதவிர்வி ளவினிர்த வத்தான்
முன்னியிவை கேண்மினென வேமொழிவ தானன். (உஅ)

வேறு.

முனிவிர்கா ளிக்கதை கேட்டு முற்றுற
வினைவரு மாசையுற் றுரைத்தி ராதலாற்

பனவரு பாக்கியத் தவரிற் பாக்கியம்
வினையறப் பெற்றனன் மேலுஞ் சத்தியம். (௨௬)

வேறு.

ீவிர்சிவ தவம்புரிந்த காரணத்தா லாசையுற்றிங் கினைவு தோன்றிப்
பூவுலகிற் சிவலோக கடம்பவனக் கதைகேட்கும் புந்தி வைத்தீர்
தேவர்தொழு மதுரேச னருளுடனங் கயற்கணருட் செல்வி யான
பாவையுமை திருவருளு நுமக்கேயுண் டாகுமிது பகர்ந்தே முண்மை.

பவமகற்று மானிடமாப் பாரினில்வந் துதித்தார்க்கே பத்தி பூண்ட், சிவனருள்பெற் றுரியதவஞ் செய்துசிவ புண்ணியமுன் செய்து ளோர்க்கே,யவமகற்றுங் கடம்பவன மான்மியங்கேட் கப்பெரிது மாசை யுண்டாந்,தவமியற்று மானிடருக் கொருக்காலுங் கேட்கமனஞ் சாரா தன்றே. (௩௧)

சித்திவிநா யகனையருட் டிருவால வாயானைத் திருமெய்ஞ் ஞான, சத்தியையங் கயற்கணுமை நங்கையைநங் குருபரனுந் தார்வேற் சேயை,நித்தியமாய் விளங்குநந்தி தேவன்முதற் கணங்களைநன் னினைவிற் கொண்டே, பத்தியினுங் கவர்ப்பணிந்து கடம்பவன மான்மியத்தைப் பகர்வாங் கேண்மின். (௩௨)

என்றுவசிட் டாதியருக் ககத்தியனுத் தரம்புகன்றே யியம்புங் காதை, நன்றுபெரி தகமகிழ்ந்து படிப்போர்நன் குறக்கேட்போர் நனி கேட் பிப்போர், துன்றுபெரும் பவந்தொறுஞ்செய் தொலைவில்பெரும் பாவவினைத் தொடர்பு நீங்கி, யொன்றியபே ரின்பமுறு முத்தியடைந் திடுவரென வுரைத்தான் பின்னும். (௩௩)

முதலாவது வசிட்டாதியரகத்தியனையடைந்தவத்தியாயம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - ௩அ.

---

## இரண்டாவது,

## வேதாகமங்கணீபவனமானவத்தியாயம்.

---

கேட்ட மாதவர் பின்னரும் விளம்புவார் கேடின்மா தவத்தோனே
கோட்ட மில்லதோர் கும்பசம் பவகுருசேட்டனே தமிழ்க்கோவே
மூட்டு மாசையா லீசனைத் துதிக்குமுன் முந்துதோத் திரஞ்செய்தாய்
நாட்டு நீபம! வனமெனுங் காரண முந்துற நவிலென்றார். (௧)

அந்த வாசகங் கேட்டலு மியம்பிய வருந்தவ ருளங்கூர,வந்த வா றெலாங்கேண்மினென் றகத்தியன் மகிழ்ந்துகந் தனைவாழ்த்தி, மூந் தை வேதத்தின் வடிவதாய்ப் பிரணவ முதலதாய் மூளைத்தோங்கு,மிந் த ரர்வணிச் சொக்கனைப் பின்னுநெஞ் சிருத்தின் னிசைக்கின்றான்.()

வேறு.

பண்டு ருத்திர னடும்பெருங் கற்பத்திற் பதுமன்
கொண்டன் மேனியன் முதலிய விண்ணவர் குழாமு
மண்ட ரண்டமு மொடுங்குகா லங்கள்வந் தடுக்கக்
கண்டு வேதமு மாகம புராணமுங் கலங்கி. (௩)

என்செய் கேமெனப் பயங்கொடு கயிலையி னேகி
மின்செய் நுண்ணிடை மெல்லியல் விமலைபங் கினனை
மன்செய் மாதவர் துதிசெயுங் கருணைவா ரிதியை
முன்செய் நல்வினை பயத்தலாற் கண்டுகை முகிழ்த்தே. (௪)

அகில முங்கடந் தீன்றளித் தனுக்கிர கிக்கு
மிகலி லீசனே யெங்கட்கு முதல்வனே யிறைவா
விகல மின்றிய வுலகமும் புரந்தருள் விமல
புகல ரும்பரப் பிரமமே போற்றியென் றெடுத்து. (௫)

விஞ்சு மித்துதி வேதவா கமங்கண்முன் விளம்பிச்
செஞ்ச வேதொழு தெழுதலுந் திருவருள் சுரந்தே
யுஞ்சு வாழுதிர் காக்குது நும்மையென் றுரையா
வஞ்ச லஞ்சலென் றலர்க்கர மமைத்தன னமலன். (௬)

அரந்தை தீர்தர வறத்துரு வாகும்வெள் ளேற்றைப்
புரந்து நாசமுற் றிடாதருள் புரிந்தன மதுபோ
லிரந்தி ரந்துநின் றேத்திய நும்மையு மெம்பா
னிரந்த ரந்தொழு திருந்திடப் பணித்திடா நிற்பேம். (௭)

ஒடுக்குங் கான்மற்றை யோரெலா மொடுங்குவ ருண்மை
நடுக்கஞ் செய்துருத் திரனடும் பிரளைய நலியா
திடுக்க ணின்றியோர் விதத்தினுற் பவித்திருந் திடச்செய்
தடுக்கு நுங்கட்கு லயமிலா தாக்குது மென்றான். (௮)

இன்ன வாறர ணியம்பவே தாகம மியம்புங்
கன்னி பாகநின் னருளினித் தியம்பெறக் கடவோ

முன்னி டத்துதித் துன்னையே யுணர்ந்திடப் பெறலாற்
பின்ன ரெங்கட்கு நினக்குமோர் பேதமொன் றின்றால். (கூ)

அருத்தி கூர்தர வம்பிகை யோடுநின் றுடு
நிருத்த முந்தரி சித்துநின் னருள்பெற வேண்டுங்
கருத்த றிந்தடி யவர்க்கருள் காரணக் கருணை
பெருத்த நின்னிடம் பிரிகிலா துறையவும் வேண்டும். (க0)

அந்த நல்வரந் தருகென வேதவா கமங்கள்
சிந்தை செய்துரை செய்தன திருவுளத் தடைத்துப்
பந்த பாசநீத் தருடரும் பரமனவ் வரங்க
டந்த னம்முமக் கென்றனன் பின்னருஞ் சாற்றும். (கக)

வேறு.

கயிலைமா கயிலை யுயர்சிவ லோகங் கருதினம் முருவமூ விடத்தும், புயனிற வண்ண னான்முக னிமையோர் போற்றினர் பணிந்துநின் றேத்த, மயலறு நந்தி முதற்சிவ யோகர் வழுத்தினர் கண்டுகண் டிறைஞ்ச, வியலுமொவ் வொன்றிற் கியைந்தமும் மூன்று சபைவகுத் தேர்பெற நடிப்பேம். (கஉ)

பூவுல கினுநம் மன்பரா யுள்ளோர் பொலிவுடன் கண்டுகண் களிக்க, மேவரு விளங்கு சபைபல வகுத்தே மெல்லிய லொடுநடம் புரிவோம், தாவரு மந்தத் தலங்களெண் ணிலவாஞ் சாற்றுவ தாரவை விரித்து, நாவினுற் சேடன் முதலியோ ராலு நவின்றள விடவெளி தன்றால். (கங)

மாநில வரைப்பின் விசேடமாந் தலங்கள் பலவுள வேனுமற் றவற்றுண், மேனிலம் பரவ நமக்குநூற் றெட்டுத் தலமிக மேம்படு மவற்றுட், பானில வெறிக்கும் வளைதவழ் பழனப் பதியுமொன் றிருபதாங் கதிகந், தூநலந் தருமத் தலங்களின் பெருமை தொகுத்திட லியாவர்க்கு மரிதால். (கச)

இப்படி புகழு மிருபத்தோர் தலத்துண் மேம்படு மொருதல மியம்பு, மெய்ப்படு சுயம்பா மிலிங்கங்கட் கெல்லாம் வேரதாய்ச் சமட்டிலிங் கமதா, யப்பண்டை பிரளை யத்தினுங் கடையு காந்தத்து மழிவிலா திருக்குந், திப்பிய விலிங்கந் தன்னில்யாம் விளங்குஞ் சிவன்முத் தித்தல முளதால் (கரு)

ஆங்கதிற் சகளீ கரித்துநா மனேக லீலைசெய் துறைகுவ மவனீர், பாங்கொடு கதம்பத் தருக்களா யெமக்குப் பன்னரு நீழல்செய் திருமி, னோங்குநும் பெயராற் கடம்பமா வனமென் றுறுபெயர் விளங்குமத் தலமுந், தேங்கமழ் மலராற் சொக்கலிங் கத்தைச் சிறப்பினே டருச்சனை செயுமின். (கரு)

சுயம்புவாய் மற்றை யிலிங்கங்கட் கெல்லாஞ் சொல்லருஞ் சமட்டியாய் முதலாய்ப், பயம்பெறு மமுதாய்க் குளிர்ந்ததாய் நிறைந்த பாவன மாமிலிங் கத்தி, னியம்பிய பரமா னந்தரூ பமதாய்ச் சிவானந்த ரூபமா மெம்மை, நயம்பெறு கயற்கண் மங்கையு நீரு நன்கருச் சனைசெய விருப்பேம். (கஎ)

கணங்கள்சூழ் தருமா கயிலையி லிருப்ப தொருகலை கதம்பகா னனத்தின்,மணங்கம ழமுத சுந்தர விலிங்கத் தொன்றுேழி யாயிர மருவிப், பணங்கிள ருலக முழுவது நன்மை பயப்புறப் பரவுமம் பிகையா, மணங்கொடு மிடப வாகனத் தெதிர்சென் றன்பருக் கன்புசெய் திருத்தும். (கஅ)

இன்னுமொன் றிசைக்கெம் பெருங்கயி லையைப்போ லிரசிதமிரத்தினங் கனக, மன்னிய சபைமூன் றுண்டதி லதிக வைபவத் துடனடம் புரிவோ,மன்னமுச் சபையி னிருத்தமுந் தெரிசித் தாங்கெமக் கணிநிழ லாகித், துன்னிய கடம்பும் வில்லமு மாகித் தொலைவிலா திருந்திடப் பெறுவீர். (கக)

ஆகம மலருங் கொடிகளு மாகி மிருதிக ளஞ்சுக மாகிப்
பாகமா ரிதிகா சம்பல புராணம் பஞ்சவன் னக்கிளி யாகி
மோகமார் தருகா மாதிய நீத்து முதற்சிவ நாமமுச் சரித்தே
மாகமார் நுமது கொம்பினில் வதிந்து வனப்புற நீர்தழைந் திடுமின்()

காலகா லங்க டோறுநன் னியமஞ் செய்யுமின் யாவர்க்குங் கருணை, யேலவே புரிமி னன்னிய சமய முற்றுளோ ரத்தலத் தெய்திற், சீலமார் சிவமெய்ஞ் ஞானங்க ளுணர்த்தித் தெளிசிவ சமயத்துட் சேர்மின், பாலலோ சனனு லயந்தினந் தொழுமி னின்னமும் பகருதுங் கேண்மின். (உக)

எச்சில்கான் றுமிழ்தன் *மலசலம் விடுத்த லின்மொழி மடந்தையர்ப் புணர்த, லச்சமொன் றின்றி யன்னரை நினைத்தல் பாகிலை யரு

* எச்சில்கான்றுமிழ்தல் - எச்சிலுமிழ்தல், கான்றுமிழ்தல் எனப் பிரித்தெண்ணுக.

ந்தல்பொய் பகர்த, னச்சியே துயிற றம்பல முமிழ்த லன்னியர் தார த்தை விரும்பல், வர்ச்சனஞ் செய்யு மசுசிபே றிழவு மனநினை யாத ன நினைத்தல். (உஉ)

கோமுகை சிவ்நின் மாலியங் கடத்தல் ந்லிபீடங் குறுக்கிடல் ப லிப்பற், றேமுற மிதித்த லேறெடு தூபி துவசதண் டியற்பலி பீட, மாமைசே ரிலிங்க மைந்தினின் சாயை மிதித்தனீ றணியாது வருத, ருமமார் விளக்குச் சாயைநல் லிலிங்கச் சாயையிற் றன்னிழ லிடுதல்.

பரிவுற திருவா ணத்தொடு புகல்பா தங்கழு வாதுபோந் திடுத, லொருவலம் வருதல் வலம்வரும் போதி லோடியே வலம்வர லிந்த, மருவரும் பெரிய குற்றமெண் ணுன்குஞ் சார்ந்திடா வாறுகோ யிலு ட்சென், றிருவருங் காணு நமையவண் சேவை செய்பவ ரெம்முல கிருப்பார். (உச)

ஆசனத் திருத்தன் மயிரது களைத லாசையுற் றிடலெண்ணெய் தேய்த்தல், வாசநெய் தேய்த்தல் கஞ்சுகந் தரித்த றலைபார்த்தன் மயிர் கோதி முடித்தல், போசனஞ் செய்த னறியநீர் பருகல் பொருந்துவா கனங்களிற் போத, லேசறு வட்டக் குடைநிழற் சேற லியாரையு மி கந்துதூ டித்தல். (உரு)

வண்டுகில் போர்த்து வலம்புரிந் திடுதல் வணங்குதல் சேவைசெ ய் திடுதன், மிண்டுறு கோபங் கொண்டிடல் சிரசில் வேட்டிகட் டிக் கொடு தொழுதல்,கொண்டொளி விளங்குந் தீவர்த்தி பிடித்துக் கொ ள்ளுத லகாலத்திற் குறுக, லெண்டகு சிவனை முன்னொடு பின்னு மி டப்புறத் தினிலுநின் றேத்தல். (உசு)

சிவதிர வியங்கள் கவர்தல்சூ தாடல் செய்திட லொருநமக்கார, நவையறு கர்ப்பக் கிருகத்திற் செபங்க ளோமங்க ணமக்காரம் புரி த, லிவையெலா மன்றி யாலயக் குற்ற மின்னமு மனேகமுண் டிய ம்பி, லவையெலா நீக்கி விதிமுறை சேவை செய்பவர் நம்பத மடை வார். (உஎ)

அந்தியங் காப்புச்†செழுங்கம லையினு மத்தயா மஞ்சிதம் பரத் துஞ், செந்தமிழ் நெல்லைப் பதியினுஞ் சேவை செய்பவர்க் கருங்க தி கொடுப்போம், புந்தியாற் சிவன் மூத்தமாந் தலத்திற் பொருந்து மெவ் வேளையிற் றொழினும், பந்தபா சங்க ணீக்கியக் கணத்திற் பரவுநந் திருவடி சேர்ப்பேம். (உஅ)

† அந்திக்காப்பு - சாயரக்ஷை. அந்தி-சாயம் காப்பு-ரக்ஷை.

காலையில் வணங்கிற் புவனிமா தான பலன்றருங் கதிருறை யுச்சி
வேலையிற் றொழிலோ ராயிரங் கபிலை தானநல் கியபயன் மேவு
மாலையிற் சேவை செய்திடிற் கோடி வழங்கிய நற்பய னடையும்
பாலுறு மன்பா லத்தயா மத்திற் பணிந்திடிற் பரிமேதப் பயனும். ()

பத்திசே ரத்த யாமத்தில் யாமே பல்லக்குச் சொக்கெனும் பெயராய்
நித்திய மாகுங் காசியே முதலா நிகழ்த்திய சிவதலந் தோறுஞ்
சத்தியோ டினிதா யவணவண் வதிந்து தங்கிய கலையெலா மீண்டு
சித்திசேர் திருவ னந்தலி லொன்றாய்த் திகழ்தரு பூரண வடிவாய். ()

அருளுரு வாகி மனோரத முடைத்தா யனைவர்க்குந் திருத்திசெய் குவதாய், மருளற வந்து வணங்கினர்க் கெல்லா மனந்தெளி விப்பதாய் நிறைந்து, தெருளுறு ஞான வானந்த மயத்திற் சேர்ப்பதாய்க் கருத்தறிந்துதவும், பொருளதாய்க் கருணை பொழியுமங் கயற்கட் பூவையோ டிருந்தருள் புரிதும். (௩௧)

ஆதலிற் றொழுங்கா லம்பல வவற்று ளதிபலன் றருந்திரு வனந்தன், மாதொடு நாமும் பரவுமெய் யடியார் வரும்வழி பார்த்தெதிர் நிற்பேம், பூதலத் துயர்ந்த செல்வமு மனையும் புகழுநன் கல்வியு மகவுந், தீதகற் றிடுமெய்ஞ் ஞானமுந் தருவேஞ் சனனந்தீர் முத்தியிற் சேர்ப்பேம். (௩௨)

நினைத்தவா றருள்வோ மாலயன் மகவா னெடுந்திசைப் பாலர் விண்ணவர்க, ளனைத்துமற் றுள்ளோ ரனந்தலிற் சேவை செய்துதம் மரசிய லடைந்தார், வினைத்திற னகற்று மம்பிகை கமலை மேதினி நாமகள் சசிமற், றினத்தவாந் தேவ கன்னியர் தெரிசித் தியைந்ததங் கணவரை யடைந்தார். (௩௩)

அதிதிவந் திறைஞ்சி விண்ணவர்ப் பயந்தா ளருந்தவர் தபோபல மடைந்தார், மதிகுலத் தரச ரனேகர்முன் றொழுது மாற்றலர்ச் செகுத்துல காண்டார், துதிசெயற் கரிய சுரர்குரு போற்றிச் சொற்கலை யுணர்குரு வானன், கதிதெரிந் திராமன் பணிந்திரா வணனைக் கடிந்தரும் பழிகழு வினனல். (௩௪)

இந்துவந் திறைஞ்சித் தக்கனல் வந்த விரும்பிணி களைந்தன னிறைஞ்சி, வந்துமாரக் கண்ட னித்தியம் பெற்றான் றொழுதருச் சுனன்வலி பெற்றான், முந்திய நாமே யறிகுவ மெவர்க்கு மொழிவரி த

ணந்தலத் தலத்திற், சிந்தனை செய்து பெற்றுளோ ரின்னு மனேகர்நீர் சேவைசெய் திருமின். (டுரு)

அன்றியு முமையாள் சோமவா ரத்தையனுட்டித்து வேண்டிய தடைந்தா, டுன்றுமவ் வாரம் விசேடமாஞ் சோம சுந்தரன் றனையவ ண் டொழுமின், முன்றிகழ் பிரதோ டத்திலவ் விலிங்க மூர்த்திசாந் நித்திய மதிகஞ், சென்றவண் பணிவோர்க் கிகபர முதவுந் தெரிசித்த ஞ் செழுத்தையுந் துதிமின். (டுசு)

சேர்ந்திடு மூலகீ ரேழுமெய் யாகச் செறிதர வுயர்விராட் புரு டற், கேய்ந்தவா தார மாறினிற் கமலை யியன்றநா வற்பதி யருணை, யார்ந்தவம் பலங்கா ளத்திநற் காசி யாறின்மேற் கயிலைமேற் றுவாத, சாந்தமேற் சிவன் முத்திமா நகர்வாழ் தற்பர னெவர்க்குமே லானே ன். (டுஎ)

மண்புன லனல்கால் வான்கதிர் மதிசீ வன்வடி விலிங்கங்கண் ம ன்னுந்,தண்பொலி கமலை நாவல்சீ ரருணை தடங்கொள்கா ளத்திதெ ன் றில்லை, விண்புகழ் திரிசி ராமலை சிவன் முத்தமாந் தலம்வியன் க ருவூ, ரெண்பெருந் தலமுன் னுகவொவ் வொன்றிற் கியைந்தனா வி ருதல மியம்பும். (டுஅ)

இயம்புமத் தலமோ ரறுபத்து நான்கி னிலிங்கத்துட் சொக்கலி ங் கத்திற், சுயம்புவா யாவுந் தோன்றுமுன் றோன்றி விராட்டுறு து வாதசாந் தமுமாய்,நயம்பெறு மதியா யமுதுயிர் வளர நல்கலாற் சோ மசுந் தரனாய், வயங்கொள்சீ வனுக்குஞ் சீவனா யீசன் மன்னலா லதி கமா மதுரை. (டுக)

கதித்தெழு முருத்தி ரன்னடும் பிரள யத்தினுங் கற்பவந் தத்து ந், துதித்திடுங் கருணை சேர்பதி நமைப்போற் றொன்மையா யழிவி லா திருக்கும்,பதித்துவ மாகு மெமக்குநீர் நிழலாப் பதிமினுங் கேகுமி னென்னு, விதித்தனன் வேதா கமங்களுக் கன்பின் விடைகொடுத் தரு ளினன் விமலன். (சு0)

நம்பெருங் கயிலை நாயகற் றொழுதி நான்மறை யாகம புரா ண, மெம்பிரா னருளப் பெற்றன மென்றே யெழுந்துள மகிழ்ச்சி கொண் டேகி, யும்பர்சூழ் சிவன் முத்தமாந் தலத்தி னுறுதபோ பல த்தினு லடைந்தே, யம்பொனு லயஞ்சூழ்ந் தருடருஞ் சொக்கை ய முதலிங் கத்திற்கண் டிறைஞ்சி. (சுக)

த்ளிரொடு புதிய மணமலர் பொதுளிச் சாயையாங் கவடது போக்கித், துளிர்தரு கதம்பத் தருக்களாய் மூளைத்த சுந்தர விலிங்கத்தைச் சூழக், குளிர்நறு நிழல்செய் தமர்ந்துதம் மலராற் கோதையங் கயற்கணாயகியை, மிளிர்பெருங் கருணைச் சொக்கநாயகனைப் பூசித்து விளங்கின தழைத்தே. (சஉ)

இன்னகா ரணத்தாற் கடம்பமா வனப்பே ரியைந்தது மதுரைமா நகரம், பன்னுமிக் கதைகேட் பவர்படித் திடுவோர் பரவுவோ ரறிந்துசெய் பவமுந், துன்னியே யறியா மற்செயும் பவமுந் தொலைந்துடன் சிவகண மாகி, மன்னுவார் கயிலை யென்றுமா தவர்க்குப் புகன்றனன் மலயமா முனிவன். (சங)

இரண்டாவது வேதாகமங்கணீபவனமானவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - க0க.

---

## மூன்றாவது

## வேதாகமங்களுக்குவரங்கொடுத்தவத்தியாயம்.

செப்பியபெ ருங்கதைசெ விப்புலனி றைத்தா
ரொப்பரிய மாதவமு னித்தவரு ரைப்பா
ரப்பணிச டைப்பரன னுக்கிரக முற்றாய்
முப்பொருளு நாடிமுரு கேசனருள் பெற்றாய். (க)

பந்தமறு ஞானசிவ பத்தியின்மு திர்ந்தாய்
விந்தவரை யந்தரபி லம்புகமி தித்தா
யந்தமுற யாவையும ளந்தறிய வல்லா
யெந்தைதமிழ் மாதவவெ மக்கருளு கிற்பாய். (உ)

வருத்திடுமு காந்தமும வாந்தரமு மன்று
வுருத்திரன டும்பிரளை யம்பெரிது மோங்கு
மருத்தியொட றிந்ததெவ னுகமபு ராணந்
திருத்தமுறு வேதமவை தென்மதுரை தன்னை. (ங)

வெற்பிறுத டங்கயிலை வீறுசிவ லோகம்
பொற்புறுமிம் மூன்றுமழி யாதவைபு கரீ

ருற்பவமு றும்பல்வுல கியாவையுமொ டுங்குங்
கற்பமத னிற்பொருவில் நந்தனுல கந்தம். (ச)

ஆதலினு யர்ந்தெழுச லப்பிரளை யத்திற்
பூதலம றைந்திடுமெ திற்பொருவி ருனந்
தீதறவி ருந்ததெவ னவ்வுழிதெ ரிந்தே
யேதமறு நீபவன மானதெவ ணேகி. (ரு)

களங்கமற வந்திடுமெக் கால்விருத் தாந்தம்
விளங்கவவை மீளவும்வி ரித்துரைசெய் கென்று
ருளங்கொளுமக த்தியனு ரைக்குமவை யுன்னு
வளந்தறிவி னோக்கியவ ருக்கருள்செய் வானல். (சு)

ஆதிகயி லைக்கிறைவே தாதிகளை நீவிர்
போதிரென வோதியவந் நாளவைபு குங்கான்
மீதெழுச லப்பிரளை யம்பரவி மேன்மேற்
கோதிலுல கங்களவை கொண்டனவ றிந்தே. (எ)

மாறுதவில் வெள்ளமும றைத்திடுதெ லாலே
யாறுதல மெப்படிய றிந்தடைவ தைய
வீறுதரு மப்பதியின் மேன்மையடை யாளங்
கூறுதியெ னத்தொழுது கூறவிறை கூறும். (அ)

வேறு.

உரைத்த வேதா கமமேயா முரைக்கே முயர்ந்த சீவன்முத்தி
புரத்திற் கிரண்டி யோசனைக்குப் புறஞ்சூழ்ந் தங்கிப் புரிசையதா
நிரக்குஞ் சலமத் தியிற்சோதி நிறைந்த தம்பம் போல்விளங்கும்
வரத்தி னுயர்ந்த தென்பாண்டி வளநா டுறையு மந்நகரம். (கூ)

தேவர் பரவும் பரங்குன்றந் திருவே டகந்திண் சோலைமலை
மேவி யுறைநம் பொன்னனையாண் மெய்ப்பூ வணமிப் பதிநான்கு
நாவின் முனிவர் புகழ்தரநான் கெல்லை சூழ நனிவிளங்கும்
பூவி லுயர்ந்த சீவன்முத்தி புரமத் தலங்க ணடுவோங்கும். (க0)

போதி ரெனவே தாகமங்கள் புகன்ற கிடைய ளத்தடைந்தே
சோதி மயமா மத்தலத்திற் சுயம்பா யெவர்க்கு முன்றோன் றி
யாதி கமடங் கடந்துவே ரப்பா லாகி யண்டாந்த
மீது வீர பதங்கடந்து துவாத சாந்த மீப்போகி. (கக)

நிறைய வெங்கும் வியாபகமாய் நீள்சன் மயச்சின் மயமாகி
யுறையு மமுத மயமாகி யுருவி யோங்கு மிலிங்கமிதென்
றிறைவ னமிழ்தா னனைந்திருக்கும் தலமைங்குரோசவெல்லையிதென்
றறை னருளாற் கண்டதிருட் புணையா லடரங் நீங்கடந்தே. (கஉ)

இதுவே சிவன் முத்திபுர மிதற்கு நிகரோர் தலமின்று
லதிபா தகரைச் சிவமெனவேட் டுவன்கைப் புழுப்போ லாக்குமென
முதுநான் மறையு மாகமமு முன்னர்த் துதித்துத் தவோபலத்திப்
பதிநாம் வந்தே மெனநீபத் தருவா யிருந்து பரவியதால். (கரு)

தருக்க ளெல்லாஞ் சிவாகமங்கள் சாற்று மிருதி சாத்திரங்க
ளுருக்கும் புராணம் புள்ளினங்க ளோங்கும் பதினெண் வித்தைகளு
மருக்கொண் டலரு மலர்மரங்க ளாகு மனிதர் சிவகணமா
மிருக்கு மொழிதென்மதுரைநகர்க்கிணையாமோமற் றொருதலமே. ()

வேறு.

சிலையுரு விலிங்க மரும்புனல் கங்கை செறிநரர் சுரரொலி வேத
மலர்தருத் தருவாத் தேனுநல் லின்ப மருந்துதல் வேள்வியூண் பூசை
நிலைதுயில் சமாதி செலல்வல முன்ன றியானநீள்சொற்செபம்வீழ்தல்
பலர்புகழ் வணக்க மாவது மதுரைப் பதிக்கலா லெந்நகர்க்குளதே.()

நுண்ணுணர் வுதவுங் கயிலையி லுறையு நூற்றுமுப் பானறு கோடி, புண்ணிய தீர்த்த மவற்றினை யுமையாள் பொற்புடன் கொணர்ந்துதா பிக்க, வண்ணமார் தருமப் பதியெலா நிறைந்து மருவிமூழ் கினர்க்கரு டரலா, லெண்ணருஞ் சருவ தீர்த்தமா புரப்பே ரியைந்தது மதுரைமா நகரம், (கசு)

அளப்பரும் வாவி குளங்கிண றோடை யனைத்துமத் தீர்த்தங்கண் மயமாங்,கிளப்பருங் கலியின் மறைந்தவை யிருக்குங் கிரீசனு ரருளினோர் கங்கை, யுளப்படுங் கிருது மாலிகை வேக வதியெனு நதியிலுப்த் திடுவோம்,வளப்படு முத்தி மூழ்கினர் பெறலான் மதுரைநன் முத்திமா நகரம். (கஎ)

வைகைமா நதியி னிறந்துளோ ரொன்பு வளர்சிவ லிங்கமா மதனை, யையுறீர் நீருங் காண்டிநா முரைத்த ததிகுய்ய மியாவருங் காண்பார், பொய்யல வின்று நாளையுங் காணும் போதெலா மதிசயம் பூணும், 'வெய்யபா தகரே யாயினுஞ் சிவமா மேவலாற்' சீவன்முத்தி சம். (கஅ)

காசியி லிறக்கத் தில்லையைக் காணக் கருதருங் கமலையிற் பிறக்க, நேசமா ரருணா சலத்தினை நினைக்க நிலைபெறு முத்தியி னான்கும், பேசுமித் தலத்தா மின்னுமோர் விசிட்டம் பேசுவாங் கேட்கவே முத்தி, வாசமா யின்ரா குவர்சிவ மீசன் வாசப்பேர் பெற்றதர்ன் மதுரை. (கக)

சுந்தர விலிங்கச் சுற்றினு நீபத் தருக்களாந் தொன்மரங் களினு
மந்தரி கயற்க ணம்மையைச் சூழு மணிநிழல் வில்லுவத் தருவின்
கந்தரங் களினுந் தவழ்புயல் வானக் கற்பக மலர்நவ மணிகள் [றும்.
சிந்தின பொழிந்து சிவாக்கினை யதனாற் சேவைசெய் திருந்திடுமென்

வேறு.

காலினாற் சூழ்ந்த நீபங் கமழ்தரு கண்ணீர் வாரப்
பாலினாற் கவடு தாழப் படிந்தெழுந் தசையுந் தோற்ற
மாலினா ரிடந்துங் காணா மதுரைநா யகன்பொற் றாளிற்
சாலினண் மலர்க வேித் தலையினால் வணங்கல் போலும். (உக)

மையுறு மலர்ப்பூங் கொம்பர் வந்துவந் தசையுந் தோற்றம்
பொய்யுறு கபடாற் போக்கிப் புனிதரைப் பிரவஞ் சத்தி
னெய்யுறு விளக்கின் விட்டில் போல்விழீர், நீங்கள் வம்மி
னையுறீ ரெனக்கை காட்டி யழைப்பன போன்று தோன்றும். (உஉ)

ஒள்ளிய நீப வேதா கமமுப நிடத மான
கிள்ளைகள் புராண நூல்சாத் திரங்கிளர் மிருதி யான
புள்ளின மிவைகள் சொக்க புராதன விலிங்கந் தன்னை
யெள்ளரு மலரிட் டன்பா லின்புறத் துதித்த தன்றே. (உங)

வேறு

உலகம னைத்தையு முருவிமு ளைத்தெழு மொண்சோதி
நிலவுப ரப்பிர மப்பொரு ளாகிநி றைந்தோங்கி
மலர்தரு சுந்தர லிங்கம்வ னப்பொடு கண்டேமே
பிலமுறு நற்றரு மத்தினர் நாமே பெரியேமால். (உச)

ஆதியு மந்தமு மில்லதொ ரொப்பிட லரிதாகிப்
போதமு றுஞ்சிவ யோகர்தி யானப் பொருளாகி
மீதெழு சுந்தர லிங்கம்வி ருப்பொடு கண்டேமே
பேதமி னற்றரு மத்தினர் நாமே பெரியேமால். (உரு)

வீசுறு சோதிச டத்துவ மாமெய்ப் பொருளாகி
மாசுறு பாவமொ ழித்தடி யார்க்கருள் வாழ்வாகித்

தேசுறு சுந்தர லிங்கமி வண்டெரி சித்தேமே
பேசுறு நற்றரு மத்தினர் நாமே பெரியேமால். (உசு)

அருமறை யின்பொரு ளாநா தமும்விந் துவுமாகி
யொருமைத ருங்கயி லைக்கிறை யாகியு மைப்போர்தங்
கருமலி னங்தெறு சுந்தர லிங்கங் கண்டேமே
பெருமைபெ றுந்தரு மத்தினர் நாமே பெரியேமால். (உஎ)

வாணிய யன்பொறி மாலறி தற்கரி தாயன்றே
சோணியல் பூசையு வந்தர சுதவிய விறையாகிக்
காணிய வின்புறு சுந்தர லிங்கங் கண்டேமே
பேணிய நற்றரு மத்தினர் நாமே பெரியேமால். (உஅ)

அறங்கெழு மம்பிகை பூசையு வந்தவ ளகமேவி
இறங்கிளர் கற்பவ ரம்பினு மொருநித் தியமாகித்
திறங்கெழு சுந்தர லிங்கமி வண்டெரி சித்தேமே
பிறங்குபெ ருந்தரு மத்தினர் நாமே பெரியேமால். (உகூ)

உருத்திர னுக்குமு தற்கா ரணமா யொன்றாகித்
திருத்துது வாதச வந்தகி லறந்தெழு சுடராகிக்
கருத்தைய றிந்தருள் சுந்தர லிங்கங் கண்டேமே
பெருத்திடு நற்றரு மத்தினர் நாமே பெரியேமால். (௩0)

என்றுது தித்தெமை யாளுதி காவா யிவணென்று
நின்றுக ளித்தவை நின்சர ணேசர ணெனவோத
வொன்றுமி ருட்டெறு மாமதி கோடியு தித்தென்ன
மின்றிகழ் சுந்தர லிங்கத் துறைசிவன் வெளிவந்தான். (௩க)

வேறு.

ஏரும் பிறையு மறுகு நிலவுஞ் சடையிற் றாழ
வாருங் கரத்தின் மழுமா னபய வரதந் திகழப்
பாரும் புகழ்பொற் பூணும் பணியா ரமுமே லொளிரக்
காருண் ணியமா முகமுங் கண்ணுங் கருணை பொழிய. (௩உ)

திக்குந் திறல்சேர் சிவமா கண்மெம் மருங்கு நெருங்க
விதிக்கு மயன்மான் முதலாம் விண்ணோர் சயவென் றேத்தத்
துதிக்குஞ் சீவன் முத்தித் தொன்மைப் பதிமெய் யன்பர்
மதிக்குஞ் சிவதோத் திரத்தாற் பணிந்து பரவிப் புகழ. (௩௩)

துகிர்மால் வரையிற் படர்ந்து சூழும் பசும்பொற் கொடிபோல்
வகிர்மா மதிநேர் நுதன்மா துமையா ளொருபான் மருவ
வுகிர்மா வலியா ளரியா யுணரா விறற்சந் திரனை *
வகிர்மால் விடைமேற் றோன்ற வந்து காட்சி கொடுத்தான். (௩௪)

கண்கள் குளிரக் கண்டே தொழும்புள் வேதா கமத்தைப்
பண்கண் மிழற்றும் பெருமான் பரிவின் னருளா னோக்கி
விண்கள் பரவ நுமக்கு வேண்டும் வரங்கேண் மினென
வெண்கள் கடந்த பொருளே யெனப்போற் றிசெய்தங் கியம்பும்.( )

வேறு.

எம்பெயரான் முத்திநகர் கடம்பவன மெனுநாம மியைய வேண்டு, நம்பெருமான் முன்னருளிச் செய்ததுபோ லித்தலத்து நாங்கள் காண, வம்பைகயற் கண்ணியுடன் பெருங்கயிலா யச்சபையி லயன்மா லாதி, யும்பர்தொழப் புரிநடன மிங்குநடித் தருட்கருணை யுதவ வேண்டும். (௩௬)

எங்கணிழ லினினடிக்கு நின்னடங்கண் டேத்துப்வர் யாவ ரேனுந், துங்கமுறு கயிலைநடந் தொழுதபய னடைந்துபவந் தொலைக்க வேண்டுந், தங்கியிவண் வசித்திடுவோர் தரிசிப்போர் பூசிப்போர் சாற்றக் கேட்போ, ரங்கவர்க ணின்னருளா லெல்லோரும் பரமுத்தி யடைதல் வேண்டும். (௩௭)

இவ்வரந்தந் தருளுகென வேதவா கமங்களெடுத் தியம்ப லோடும், வெவ்வரந்தின் றயில்படைக்குஞ் சூலிபுகல் வான்மெய்ம்மைத் தலம்வி சேடங், குவ்வரந்தான் பெறுதலினுங் கூறுமநா தியினிருமித் திடுத றன்று; லவ்வரந்தந் தனநுமக்கே நடனமுமப் படிகாண வளிப்பே மென்றே. (௩௮)

மாகயிலை நடம்புரியு மூர்த்தம்போ லித்தலத்தும் வசிப்பே நாமே, யேகமெனும் பரசிவமா மங்கயற்க ணிறைவிபரா சத்தி யாகு, மோகமற வெமைநரருள் யாரேனுந் தரிசிக்கின் மொழியக் கேட்கிற், போகமொடு புகலரிய முத்தியுமுண் டாமின்னும் புகலக் கேண்மின். (௩௯)

சீவன்முத்தி புரமிதனு நிருமித்த சிற்சபைமூன் றவற்றைச் செப்பி, லோவறநா முறையிலிங்கத் தின்கிழக்கத் திசையினுக்குத் தரமீ சா

* சந்திரன் - இரணியன். சந்திரம் - இரணியம்.

ன,மேவுமவை பெயர்விளம்பி லிரசிதம்பொன் னிரத்தினமென் மு
றையே மேவு, மேவமிலிந் தலமதிக மெத்தலமு மித்தலத்துக் கிணை
யொவ் வாதால். (௪0)

தூரத்தே கண்டுசபைத் தூபிதொழு தாற்பிறவித் தொடர்பு நீ
ங்கிக், கோரத்தே கோடிசென்மத் தாற்றுபவந் தொலைந்துகதி கூடு
மென்று, வீரத்தே மலர்க்கடம்ப வனத்தணுகிச் சிற்சபைகண் டிறை
ஞ்சி யன்பின், வாரத்தே வெனத்துதிப்போர் பெறும்பேறிவ் வள
வையென வகுக்கற் பாற்றோ. (௪க)

மார்கழியா திரைசோம வாரமா தப்பிறப்புப் பிரதோ டங்க,
ளேர்கெழுநற் சித்திரா பூரணைவை காசிப்பூ ரணையெந் நாளு, நீர்
கெழுசித் திரைவிடுவைப் பசிவிடுவித் தினங்களினந் நிருத்தங் கண்டா
ற்,சீர்கெழுநங் கருணையினாற் போகமொடு முத்தியுமுண் டாகுந் தி
ண்ணம். (௪உ)

இங்குமக்கு மார்கழியா திரைநாளி னியைந்திடுமுத் தரப்பொன்
மன்றிற், றுங்கமுறுங் கயிலாய நடஞ்செய்வோ முனிவர்சுரர் துதி
சேர் யோக, ரங்கமலக் கண்ணன்மலர்க் கண்ணனரும் புலிமுனியா
டரவங் காணப், பொங்குமிர சிதசபையி லநாதிசதா சிவநிருத்தம் பு
ரிவோ மென்றும். (௪௩)

ஈசான திசையிலிரத் தினசபையி லங்கயற்கண் ணிறைவி கா
ணத், தேசாரு மானந்த சிங்கார நடம்புரிதல் செய்வோ நீங்கள், கூ
சாது காண்மினென வரங்கொடுத்துக் கூறுமிலிங் கத்தி னுனன்,
காசாரும் பவமகற்றுஞ் சொக்கனருள் செய்ததுதங் கருத்தி னெ
ண்ணி. (௪௪)

கதம்பவன மாகியவே தாகமங்க டிருநடஞ்சொல் லியநாட்
காண்பான், பதம்பரவி யிருந்தனநம் முருகனுனைப் படிபகர்ந்தேம்
பகருங் காதை, திதம்பெறக்கேட் போர்படிப்போ ரொருநூறு செ
னனத்திற் செய்த பாவ, விதம்பலநோ யகன்றிடுவர் தீர்த்தமெலா
மூழ்குபயன் மேவு மன்றே. (௪௫)

எத்தனையா கங்களுள வத்தனையும் புரிந்தபய னெய்துங் கூட,
னித்தனரு ளாற்பரம முத்தியுமெய் துவருண்மை நிகழ்த்தி னேமெ
ன், றுத்தமமா தவர்கேட்ப வகத்தியனார் கியம்பினன்கேட் டுவகை

கூர்ந்து, புத்தமுதா மெனவிளங்குந் தீர்த்தமான் மியத்தையினிப் புக
ல்வா மென்றார். (சசு)

மூன்றாவதுவேதாகமங்களுக்குவரங்கொடுத்தவத்தியாயம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - கசஎ.

---

நான்காவது.

## தீர்த்தமகிமையுரைத்தவத்தியாயம்.

அருந்தவ ரியம்பக் கேட்ட வகத்தியன் சொல்வா னீதி
பொருந்துறு சிவன் முத்தி புரத்துறை தீர்த்தம் யாவுந்
திருந்துறப் புகல்வாங் கேட்போர் சிவகதி யடைவ ரென்று
மருந்தினு மினிய செவ்வேண் மலரடி தொழுது கூறும். (க)

முந்திய தீர்த்தம் பொற்று மரைத்தட முதன்மை யாக
வந்தவுற் பவமுந் தீர்த்த மகிமையுந் தொகுத்துச் சொல்வோம்
புந்தியி னினிது கேண்மின் பாதகம் போக்குஞ் சோம
சுந்தர னனுக்கை யானீர்ச் செந்துக்க டோன்றுந் தீர்த்தம். (உ)

ஆதிகா லத்தின் வந்தே யுருத்திர னடுங்கற் பத்தின்
மீதெழுந் தோங்கி முந்நீர் வெள்ளமு மிருளு மூடிப்
பூதல முதலா யுள்ள வுலகெலாங் குலைந்து போங்கான்
மேதகு கங்கை யாதி நதிகடல் விண்மே கங்கள். (ஙூ)

மற்றுள சிவத லங்க ளியாவுமுன் மறைந்த தாங்கண்
கற்றைவார் சடையெம் மீசன் கவுரிக்குத் தனது லீலை
முற்றுறக் காட்டு வான்முன் சகளமாய் விடைமேற் றேன்றி
வெற்றிமான் மழுவோ டங்கை மிளிர்வர தாப யங்கள். (ச)

விளங்கிட வயன்மால் விண்ணோர் மிக்கநந் தீசன் முன்னு
வளங்கெழு கணங்க ளோடும் வந்துநீர்ப் பிரளை யத்துட்
களங்கற மறைந்தி ருக்குங் காசிதென் னருணை யாரூர்
துளங்கலின் முதுகுன் றாதி பருப்பதந் தொழுங்கே தாரம். (ரு)

ஈங்கிவை முதலா மற்று மியம்பிய தலங்க ளெல்லாம்
பாங்கரம் பிகைக்குக் காட்டிப் பின்பினுற் றானுண் டாக்க
வோங்கிய சிவன் முத்தி புரத்தில்வந் துயர்ந்த வெள்ள
மாங்குரு வாறுஞ் சோதி யுலிங்கமு மடைவிற் காட்டி. (சூ)

றிச்சையா மிவ்வி லிங்கத் துறைகுவ மெந்த ஞான்று
ழச்சகம் புகழு மிந்த மூலலிங் கத்தி னின்று
ிச்சய மாக லீலை செய்வது நினைந்தே மென்றே
மச்சயார் விழிக்கும் போற்று மான்முத லோர்க்குங் கூறி. (எ)

பின்னரும் புகல்வா னின்ற பிரமன்மான் முதலி யோரை
முன்னரு மிலிங்கந் தன்னி லுமையையு மெமையும் பூசித்
தென்னருள் பெற்று நீவி ரேகுமின் கயிலை யாங்கு
மன்னுவங் கலையொன் றிங்கு வைகுவ மனந்த மாகி. (அ)

என்றிறை யிலிங்கத் தாங்கா லிருங்கணநாதர் யாரு
நன்றறி யயன்மால் விண்ணோர் நாதனே யென்று போற்றித்
தொன்றுதேர்ந் திலிங்கம் பூசை செயத்தொழப் பரிசித் தேத்த
வன்றவே நினைக்கப் போக முத்தியும் வழங்குந் திண்ணம். (கூ)

ஆதலாற் சொக்க லிங்கத் தருச்சிப்பா னுசை யுற்றேம்
போதுதோ றபிடே கங்கள் புரிவதற் கிவணோர் தீர்த்த
மாதநீ யளிக்க வேண்டு மென்றவர் நயந்து போற்ற
மாதொரு பாக னுங்கு வரங்கொடுத் தியற்றல் செய்வான். (கo)

ஆன்றதன் னிலிங்கத் தங்கி திசையிற்சென் றவனி விள்ள
வூன்றினன் சூலங் கீழ்போய்ப் பிரமாண்ட கடாகத் துற்றே
யென்றுறப் பாய்ந்து தாக்கிற் றவணுதித் தெழுந்து பொங்கித்
தோன்றின பிரவா கம்போற் றெழத்தரும் புனித தீர்த்தம். (கக)

அன்னது வரவு மெங்கோ னுங்கணோர் வாவி யாக்கித்
தன்னுயர் முடியில் வேணி தரித்தமென் கங்கை நீரைத்
துன்னுமந் நீரில் விட்டுத் தொழுஞ்சிவ கணத்தை நோக்கி
முன்னுறக் காண்டி ரென்னுக் காட்டினன் மொழிவ தானுன். (கஉ)

வேறு.

து கேளுநா மாதியி னிருமித்த வியல்பா
லாதி தீர்த்தமாந் தரிசிக்கி லரும்பவம் போக்குந்
ீது தீர்க்குமூ வுலகினுட் டீர்த்தங்கட் கெல்லாஞ்
சோதி சேர்பர மாகையாற் சொலும்பர தீர்த்தம். (கங)

கையி னுற்றெடிற் றரும்பயன் கருதய மேதம்
வைய முய்யநாந் தருதலால் வளர்சிவ தீர்த்தஞ்
செய்ய ஞானத்தை நல்கலாற் றிகழ்ஞான தீர்த்தந்
துய்ய முத்திதந் தளித்தலாற் றெழுமுத்தி தீர்த்தம். (கச)

சறுவ தீர்த்தமு மொடுங்கலாற் சறுவதீ.த தமுமா
மறுவில் சூலத்துண் டாகையால் வ[illegible] தீர்த்தம்
பிறிவி லாவிதின் மூழ்கியே யிருடியர் [illegible]
ணிறுவு தேவரைத் தருப்பிக்கிற் பவ[illegible]கும். (கரு)

பன்னு தீர்த்தத்தின் மூழ்கிநம் பரையையு நமையு
முன்னி யேபணிந் தெழுந்துரு நூற்றெட்டா யிரத்தெட்
டின்ன றீரவஞ் செழுத்தினை யியல்பினுச் சரித்தே
மன்னு தோத்திரம் பிதக்கணஞ் செயிற்பவ மாறும். (கசு)

இயங்கு தீர்த்தநீ ரொருமுறை தெரிந்தெமை யாட்டில்
வயங்கு கங்கையா தியபுவி மருவுதீர்த் தத்தான்
முயங்க வாட்டிய பயனுறு நீவிரு மூழ்கி
யுயங்கு மன்பினி லாட்டியே யுரைத்தவா செ[illegible] (க[illegible])

எனவு ரைத்தனன் றுனுமம் பிகையுட னிறங்[illegible]
புனித தீர்த்தநீர் மூழ்கினன் போற்றிய கணங்க
ளனைவ ருக்குநன் கருளின னீவிரு மாடும்
வினைய கற்றுமீ தென்றிலிங் கத்தின்மே வினனுல். (கஅ)

மீள வுஞ்சக ளீகரித் துமையுடன் விளங்கி
யாளு ராயகன் றீர்த்தவா விக்கரை யமர்ந்தெந்
நாளு நல்லருள் புரியுநற் கணத்தர்மான் முதலோர்
காள கந்தரற் பூசித்துக் கயிலையை யடைந்தார். (கசு)

புவியின் மேம்படு தீர்த்தத்தி னுற்பவம் புகன்றேம்
விவித மாமதன் மகிமையைத் தொகுத்தெவர் விரிப்பார்
நவிலு மன்னது தரிசிக்கிற் பவமெலா நசிக்குங்
குவினு றும்பல தீர்த்தமா டியபயன் கொடுக்கும். (உ0)

மூன்று நாளொரு நாளதின் மூழ்கிலெப் பவமுன்
னேன்றி டாதவை நீங்குமுன் னியம்பிய பயனுந்
தோன்றும் வில்லுவத் தடிமண்பூ சித்துளோந் தாடி
லூன்று மப்பயன் சோடச தானமு முண்மை. (உக)

பத்தி யின்றியே மூழ்கினுங் கனல்பரி சிக்கிற்
றொத்தி யேசுடு மாங்கது போற்பவந் தொலைக்கும்
புத்தி கூர்ந்துநற் சுவர்க்கமெய் துவர்நித்தம் புனறோய்ந்
தத்தி னுமுத்தி மந்திர நீரினீ ததிகம். (உஉ)

டலகி லுள்ளதீர்த் தங்கள் [illegible] மாத் தமமீ
நிலக மூழ்கியே தேவதர் [illegible] தி வியற்றி
வலகில் யாகநற் பயனரும் [illegible] செபந் தானம்
பலக லைப்பயன் றரும்பொற்ற மரைத்தடப் பாங்கர். (உ௩)

செய்யி லொன்றொரு கோடியாம் பிறந்தநா ளினிற்சென்
றய்யு மாறுமூழ் கிற்சென்மாந் திரப்பவ மொழியு
மையில் சித்திரை கார்த்திகை மாகநற் றிங்க
ய்ய மூன்றினுந் தோய்ந்திடக் கிட்டுத லரிதால். (உ௪)

சொக்க னல்லரு ளாலதிற் கிட்டுமேற் சொன்ன
திக்கு யர்ந்திடு நாளினு மிகுபலன் மூழ்கிற்
புக்கு நித்திய மூழ்கிய பலத்தினும் பொருந்துங்
க்க பூரணை யமாவாசி சதமடங் கதிகம். (உ௫)

மன்னு வாவினிற் சேர்மாதப் பிறப்பிலா யிரம்வான்
றுன்னு சந்திர சூரிய கிரணமோ ரிலக்க
மன்ன நற்பய னுயர்விதி பாதத்தி லனந்த
முன்னு சித்திரை யைப்பசி விடுவதோ ரயுதம். (உ௬)

அப்ப யன்னிரண் டயுதமா மயனமோ ரிரண்டின்
செப்புந் திங்கள்வா ரத்தமா வாசிநீர் திளைத்தே
யொப்ப ருஞ்செபந் தானங்கள் செய்யிலொன் றனந்தந்
தப்பி லாதுபோம் பிரமகத் தியுந்தட மூழ்கின். (உஎ)

கருப்ப ணம்பிதிர்க் கடன்செயிற் றுவறு பிதிர்க்கள்
பொருப்பு வில்லினு னுறைதரு கயிலையிற் புகுவா
ருப்ப மன்றிதோ றொள்ளினுக் காயிரம் வருடம்
விருப்ப நல்கிய சுவர்க்கலோ கத்தின்மே வுவரால். (உஅ)

எங்கு மற்றுள விலிங்கத்து மூர்த்திக ளெல்லாம்
பொங்கு தீர்த்தப்பொற் றமரைக் கரையினிற் போந்து
தங்க டெய்வமென் னத்தரி சிப்பர்நா டொறுமே
லிங்க பூசனை செயிலெல்லா லிங்கத்து நிகழும். (உ௯)

சித்தி யந்தட நீர்படிந் தீலிங்கபூ சயைநீள்
பத்தி யாற்செயிற் போகமு முத்தியும் பலிக்குஞ்
சத்தி யந்தவம் வேள்விநல் விரதமா தான
மொத்த நான்மறை கோடிமூழ் கினர்பயி னெவ்வா. (௩0)

வேறு.

சென னுந் தரத்தி லுயர்தானஞ் செய்யுந் தருமந் தவநியம
மனனு தரவாற் செயிற்கிடைக்கும் பொற்றா மரைவா வியின் மூழ்கக்
கனமார் தீர்த்தஞ் சிவரூப மாமா கத்திற் ப்ரயாகையினி
லினமா முற்றுந் தோய்ந்தபல னெய்து மிதிலோர் நாண்மூழ்கின். ()

புந்தி மகிழ்ந்திப் புனலோராண் டாடிப் புராரி தனையுமையை
வந்தி யரும்வந் தனைசெய்து வணங்கின் மகப்பே றடைந்திடுவ
ரிந்த வுலகிற் றீர்த்தமெல்லா மிதிற்கோ டியிலோர் கலையொவ்வா
பந்த பாவ வினையகலும் பார்க்கிற் றேடினற் பொருள்சேரும். (௩௨)

பானம் பண்ணி னினைத்தவெல்லாம் பண்பி னடைவர் காசியினில்
வானந் தருசக் கரதீர்த்த மாலோ னிருமித் திடவிளங்கு
ஞானந் தரும்பொற் றாமரைநீ ரவற்றின் மிகுநன் னலஞ்சிறக்குந்
தேனந் தியபூங் குழலுமைபாற் சிவனே நிருமித் திக்கவிளங்கு

ஆதி தீர்த்தஞ் சிவதீர்த்த மருள்சேர் தருமக் கினிதீர்த்தஞ்
சோதி செறிதற் பரதீர்த்தஞ் சூல தீர்த்தஞ் சிவகங்கை
நீதி திகழ்பொற் றாமரைமா தீர்த்த நிறையெக் கியதீர்த்தம்
பேத மறுமெய்ஞ் ஞானமுத வுதகம் பரமாம் பிரமமயம். (௩௪)

சறுவ தீர்த்தஞ் சிவஞான தீர்த்தந் தரும தீர்த்தமெழில்
செறிநீர் முத்தி தீர்த்தந்தீர்த் தவுத்த மந்தீர்த் தாசிரயம்
பொறிசேர் பாவ நாசமியல் பொருந்துந் தேவ தீர்த்தநெறி
யுறுசீர்ச் சிவப்பி ரீதிகர மோங்கு புகழ்மங் களதீர்த்தம். (௩௫)

தொடருந் துரித நாசனமுன் றேன்று முரோக நாசனமே
லடரும் வினைதீர் கலியாணி தீர்த்த மெனும்பே ரதற்கியையும்
படரும் புவியி னிந்நாமம் பகர்ந்தெந் நீரிற் படிந்திடினு
மிடர்தீர் பொற்று மரைத்தீர்த்த மூழ்கும் பேறெய் துவர்திண்ணம்.

பொற்று மரையின் வரலாறு புகன்றேந் தொகுத்து நுமக்கிங்கு
மற்று றுரைப்பா ரதன்பெருமை மாபா தகபஞ் சிற்கனலா
முற்று முலையா ளொருபாகன் றனே வல்லன் மொழிதருநூல்
கற்றோர் கேட்டார் படித்திடுவார் களிப்பார் முத்தி யெய்துவரால். ()

வேறு.

என்று கூறினன் முனிவரர் பின்னரு மிசைப்பார்
நன்று கேட்டக மகிழ்ந்தன மென்றனி போற்றிச்
சென்று மூழ்கினர் பவந்தொலைத் திடுஞ்சிவ தீர்த்தந்
தோன்று தீர்த்தம துறையெ்பன வகத்தியன் சொல்வான். (௩௮)

எந்த நாளுமிங் கதிசயங் காட்டுமித் தீர்த்தம்
பந்த நீங்குற மூழ்கினர் பேற்றையார் பகர்வார்
புந்தி யாலளந் தறியொரு விசேடத்திற் பொங்கு
மூந்த் நீர்வின வியதுநன் ருலென மொழிவான். (௩௯)

நீப மாகிய வேதவா கமங்களின் மலரு
மாப ரம்பரன் காட்சிதந் தருளுநாள் வணங்கித்
தாப வெம்மைதீர்ந் தியாங்கண்முன் றழைத்திட வருளின்
றீப மாகிய தீர்த்தமொன் றுதவுதி யெனவும். (௪0)

கருணை நாயக னியம்புவான் வேதவா கமமே
பொருண யம்பெறு மதிகுய்யம் புகன்றிடக் கேண்மின்
னருண மார்தரு தீர்த்தமே நமதுருத் தையல்
வருண மார்தரு பீடநா மிலிங்கத்தின் வடிவம். (௪௧)

எம்மிற் றேன்றியே யொடுங்குவர் மாலய னிமையோர்
தம்மிற் றேன்றிடுஞ் சராசர மெவையுந் தன்மை
நும்மிற் றேன்றிடக் காண்மினீர் நூல்வடி வன்றே
கம்மிற் றேன்றிய வுலகர்க்குக் காணுத லரிதால். (௪௨)

இன்ன ணம்புகன் றிலிங்கத்தி னுற்பவ மாகி
யுன்ன ரும்மொரு குரோசதூ ரத்திற்குள் ளாகச்
சன்னி திக்கெதிர் தோன்றிடத் தன்கரு ணையினுற்
பன்ன ரும்புனற் றீர்த்தமுண் டாக்கினன் பகர்வான். (௪௩)

பாமி யற்றலா லிதுசிவ தீர்த்தமித் தீர்த்தஞ்
சேம மாருயிர்க் கெனப்படிந் திடிற்றரி சிக்கிற்
பூமென் றண்புன லுண்டிடிற் புரோக்கணம் புரியி
னேம நோய்களு நீங்குமெப் பாவமு நசிக்கும். (௪௪)

கங்கை யேமுதற் றீர்த்தங்கள் கருதிநம் விழியை
யங்கை யாற்புதைத் திட்டநா ளமலையங் குலியின்
றுங்க மாகவந் துதித்தலிற் புனிதமாந் தோன்று
மிங்கு நம்மிடத் துதித்தலா லவற்றினீ ததிகம். (௪௫)

இன்னு மொன்றியா மாடுநின் மாலிய தீர்த்தந்
தன்னின் மூழ்கினுண் ணிற்றேடிற் காணினுச் சரிக்கிற்
றுன்னு பாதகந் தொலைத்துடன் றெல்கதி யளிக்கும்
பின்னு மீதன்றி மற்றென்று பகருதுங் கேண்மின். (௪௬)

வேறு.

அருப்பூர வெமையிாட்டுங் கருப்பூ[illegible]மிதி லதிக நாமே, விருப்பூரக் கொண்டருளி வேண்டுவான் [illegible]ண்டியதை மிகவு மீவோ, நெருப்பூர்பஞ் செனித்த முழுந்தளவு[illegible] பவர்பவங்க ணீறு முண்மை, கருப்பூர வாஞ்சையினற் கருப்பூர சொக்கெனும்பேர் கருதிக் கொண்டோம். (௪௭)

வேதநெடு மான்முனிவர் விண்ணவரோ முதலினர்நாம் விரும்பி யாடுங், தாதுகமழ் கருப்பூர்நின் மாலியதீர்த் தம்விரும்பித் தவத்தாற் கொள்வா, ரோதுவதென் வேள்விமுதற் புண்ணியமுன் செய்தவர்க் கே யுதவுந் தீர்த்தங், கேதமுறு பாதகர்க்கு நாமளித்தா லன் றியுண் ணக் கிட்டா தன்றே. (௪௮)

சிவதீர்த்த முதலாநின் மாலியதீர்த் தச்சலத்தாற் [illegible] நவைதீர்த்து வளர்மினிதி லெழுகடலு நாமழைத்[illegible] கவைதீர்த்தின் னருள்கொடுக்கு மெனவருளி யீசனி[illegible] றவதீர்த்த நீர்நனைந்து கதம்பமும்வில் லமுமெங்குந் தழைத்ததன்றே.

இத்தீர்த்த மாதடத்தி லிறையருளா லெழுகடலு மியைந்த தென்றுன், முத்தீர்க்கு மத்தடத்தின் மூழ்குனர்பே றளவையெம்மான் மொழிய லாமோ,வத்தீர்த்தந் தருப்பித்துப் பிதிர்க்கடன்க ளொன்று ற்றி லதிகங் கோடி, புத்தீர்க்கு நரகமுழுந்தும் பிதிர்க்களெல்லாஞ் சிவ லோகம் பொருந்தி வாழ்வார். (௫0)

உம்பர்புகழ் சிவதீர்த்த மகிமையிவை யுவந்துபடித் திடுவோர் கேட்போர், வெம்பவமெல் லாந்தொலைத்துச் சிவலோகத் தெய்திவிம லன்போல் வாழ்வர், நம்பரனுங் குமரகுரு பரன்புகன்ற வாறுமக்கு நவின்றே மென்றே, கும்பமுனி மாதவத்து வசிட்டாதி முனிவரர்க் குக் கூறி னுனல். (௫௧)

நான்காவது தீர்த்தமகிமையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௬௪.

# ஐந்தாவது

## நடம்புரிந்தவத்தியாயம்.

வந்தனை செய்து கேட்ட முனிவரர் மலையக் கோவே
சிந்தனை செய்த வேதா [illegible]ந்தரி சிக்க நாத
னெந்தநா ணிருத்தஞ் செய்தா னவன்பிர மாணம் யாதிங்
கந்தநாட் கண்டோ ரியாரவ ரவைதொகுத் துரைத்தி யென்றார். (க)

நன்றுநீர் கேண்மி னென்று வகத்திய னவில்வான் ஞான
மொன்றியே வளரு நீப வுருவின்வே தாக மங்கண்
மன்றுளே நடிக்குஞ் சொக்கை யிரண்டற மனத்துள் வைத்தே
[illegible]ற்றி யுறைந்தன நெடுங்கா லங்கள். (உ)

[illegible] வந்த வுருத்திரப் பிரள யத்தான்
மறைந்திடு முலகத் தோடு வானுளோ ராயுமொ டுக்கி
நிறைந்திடு மீசன் றனே யொருவனாய் நின்றான் காலத்
திறந்தெரிந் தியாவு முன்போற் சிருட்டிசெய் திடுவா னெண்ணி. ()

தன்னிட மாக விச்சா சத்தியைத் தோற்று வித்து
மன்னுமச் சத்தி யான்முன் னொடுக்கிய வாறே நல்க
முன்னுற வருளிச் செய்தா னவளிட மாக முன்போற்
றென்மைசே ரயன்மால் விண்ணோர் சனகாதி யோகர் தோன்றி. ()

மற்றுள பிரவஞ் சங்க ளியாவுமவ் வரம்பிற் றோன்றி
முற்றுறு முலக மியாவு முன்னையி னிருந்த திப்பாற்
கற்றையஞ் சடையான் வேதா கமங்களுக் கருளை நல்கச்
சொற்றிடு மிலிங்க நின்றுந் தோன்றினன் விடைமேன் முன்போல்.

வெளிவரு சொக்கன் றன்னை வேதவா கமங்க ணோக்கித்
துளிவரு மன்பின் முன்போற் றோத்திரஞ் செய்து நிற்பக்
களிவரு மன்பர்க் கன்பன் கருணைசெய் தருளித் தூய
நளிவரு முளத்தீர் கேண்மி னல்குவம் வரங்க ளென்றான். (சு)

முன்புநீ யருளிச் செய்த மொழிப்படி யாங்கள் காணத்
தென்புவி விசேட மாகத் திருநடங் காட்ட வேண்டு
மன்பதை யுலகங் கண்டு வாழ்வுற வேண்டு மென்ன
வன்பினாற் றொழுது கேட்ப வவ்வர மளித்தெம் மையன். (எ)

கண்டுசே விக்க ஞானக் கண்கொடுத் தருளி மன்றிற்
பண்டைவே தாக மங்கண் முதலிய பரவிக் காண
வண்டருங் காணொ ணாத பொற்பத மதிர வீசித்
தண்டலி னிருத்தஞ் செய்யத் தளாநடு நடுங்கிற் றன்றே. (அ)

நானில நடுங்கக் கண்டு நந்திரு நடம்பொ ருதென்
றூனிலந் தாமுஞ் சொக்கன் றிருவுளத் தடைத்த ழைத்து
வானிலம் போற்றுந் தூய மாபெருங் கயிலை தன்னைப்
பூநிலச் சீவன் முத்தி புரத்தினி லிருத்திப் பின்னர். (௯)

அக்கயி லையினெப் போது மான்றமுச் சபையி னம்பொ
னுக்கதின் றெளிருந் தூய வுத்தர மன்றந் தன்னிற்
செக்கர்மே னியவெம் மண்ண றிருநடம் புரிந்தான் கண்டு
மிக்குயர் ஞானக் கண்ணாற் றுதித்தவே தாக மங்கள். (௧௦)

மூவரா லறிய வொண்ணுச் சிவலோகந் தனையு முன்னைப்
பாவறிந் துதவு வாணீ பவனமத் தியின மைத்து
மேவரு நகர மாக்கி விரும்பினீர் காண்மி னென்ன
யாவருங் கண்டு போற்றி யரகர வெனச்சேவித்தார். (௧௧)

அவ்வுல கத்தின் மேவு மகாதிநந் தியைவெள் ளேற்றைத்
தவ்வுறு துறைக ணங்க டன்னையுங் காட்டி யப்பா
னவ்விசேர் கரத்தி னுன்முன் னவின்றமார் கழிமா தத்திற்
செவ்விய திரைநா * ளீசா னத்திரத் தினமன் றத்தில். (௧௨)

அங்கயற் கண்ணி யம்பொ னசனத் திருந்து காணப்
பங்கய வலத்தாள் பண்பின் முயலகன் முதுகி லூன்றித்
துங்கநூ புரங்க ளார்ப்பத் துலங்கிடத் தாள்குஞ் சித்தே
செங்கைமான் மழுவோன் றூய சிங்கார நடனஞ் செய்தான். (௧௩)

அரியயன் முதலாம் விண்ணோ ரம்புலி பாம்பு மோனந்
தெரிதரு முனிவர் மற்றுஞ் செப்பிய வனேகர் காண
விரிசுட ரமுத லிங்க முன்னரின் வெள்ளி மன்றிற்
பரிவொடு பரமா னந்தப் பராபர நிருத்தஞ் செய்தான். (௧௪)

உற்றகா ரணத்தி னுற்பூ வுலகமா கயிலை யென்று
நற்றவர் புகழ்பூ லோக சிவலோக மென்று நாமம்
பெற்றது மதுரை யிந்தப் பெருங்கதை படிப்போர் கேட்போர்
கற்றுளோர் பவங்க ணீங்கிக் கதியடைந் திடுவர் திண்ணம். (௧௫)

---

* ஆதிரைநாளிலே, உஷக்காலத்திலே. உஷக்காலம் வடநூலிற்கூறப்பட்டது.

னிசழ்த்தினே மென்னக் [illegible] நெடுந்தவர் மலையக் கோவே
மகத்துவத் ததிக மிந்த ம[illegible]பெருங் கயிலை யென்றாய்
தொகுத்தவக் கிரிவ[illegible]கைவகை விரிவா யாங்கள்
பகுத்துணர்ந் தறிட வேண்டும் விளங்கநீ பகர்தி யென்றார். (கசு)

ஐந்தாவது நடம்புரிந்தவத்தியாயம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உகச.

---

ஆறாவது
## மகாகைலைமான்மியமுரைத்தவத்தியாயம்.

[illegible] யென்னும் பன்னி வினவிடத் தரும சன்மா
[illegible] செய்தான் றெய்வ முதுபெருங் கயிலை வண்மை
பனவரிற் றவத்தா னன்னோன் பகர்ந்தவா றுரைப்பேங் கேண்மி
னனகமா முனிவிர் காளென் றகத்திய னருளிச் செய்வான். (க)

சிவனையே பொருளாக் *கொண்டு தெளிந்தபே ரறிவின் மிக்கா
ணவமுறு கற்பின் பன்னி வினவினை நவில்வாண் ஞானத்
தவர்களிற் பெரியோய் மிக்குத் தனிப்பெருங் கயிலை யென்றே
யுவமையின் ஞான நூல்க ளுரைக்குமா துணர வேண்டும். (உ)

அவ்வரை யிருக்குந் தான மதன்கொடு முடியி லக்க
மெவ்வமி லுயர்ப கற்சி யுறைபவ ரியையும் போகந்
தவ்வுறு தவைவி ரித்துச் சாற்றுதி தமியேற் கென்னக்
கௌவைதீர் தரும சன்மாக் கழறுவான் மனைவி கேட்ப. (ந)

சொற்றிடும் புவனந் தோறுந் தொடுகடற் பூவி னுள்ளு
மற்றுள தீவு தோறுங் கயிலைமால் வரைக ளுண்டு
கற்றைவார் சடையெம் மீசன் கருணைமா துமையா ளோடு
முற்றிடு மங்கங் கெல்லா முள்ளவா றின்னுங் கேணீ. (ச)

பிறங்குமவ் விடங்க டோறும் வைகுண்டம் பிரம லோகந்
திறங்கெழு கமலக் கண்ண ரெண்ணெண் ணவற்றிற் சேர்வர்
[illegible]றங்கொள்பா லாழி நள்ளிற் சுவேததீ வதிக மாங்க
[illegible]ணிறங்கெழு மாதி மாயோ னறிதுயில் கொள்வா னீங்கான். (ரு)

பிரமலோ கங்க டன்னிற் பெரிதுசத் தியவு லோகம்
பரமனும் பிரம னுங்குப் பரிவின்வீற் றிருப்பான் றூய
வரமுறு கயிலா யங்க டன்னின்மா கயிலை மிக்குத்
திரமுறு மதில னாதி சிற்பர சதாசி வன்றான். (௬)

மூலமே முதலா தார மாறினு முக்கட் பெம்மான்
சாலவே யுறைந்தா னேனு மருகதத் ததிகந் தானு
மாலநேர் விழியாய் கேணீ யதுவென விதுவி சேட
நூலறி வுடையோர் தாமு நுவல்வர்மா கயிலை யென்றே. (௭)

தேசுறு மொளியு டைத்தாய்ச் சிலையொடு மண்டா துக்கண்
மாசுறு வம்பொன் றங்கம் வளர்நவ மணிகள் வெள்ளி
பேசுறி னவையு மன்று பெரும்பரஞ் சோதி ரூப
மாசுறு நித்த மாகு மதன்றிறம் புகல்வா ரியாரே. (௮)

அரும்பெருங் கயிலை யாகு மதிலடைந் திடுவோ ரென்றுந்
திரும்பவும் வாரார் மூலச் சிவத்தொடுங் கலந்து வாழ்வர்
விரும்புமவ் விமலன் போலு மெய்க்கிரி வடிவம் வாசச்
சுரும்பிமிர் குழலாய் கேளென் றதன்பிர மாணஞ் சொல்வான். (௯)

வேறு.

பாங்குறுமிவ் வுலகிலுள்ள தீவுக் கெல்லாம் பகரினடு வாயிருக்குஞ் சம்புத் தீவ,மோங்ககற்சி யோசனையோ ரிலக்கஞ் சூழு மூவர்க்கடலு மவ்வளவை யவற்றைச் சூழ்ந்து, நீங்கரிய வாலந்தீ விரண்டி லக்க நிறைந்தகன்ன விரதவா ரிதியு மற்றே,யாங்கதற்கப் பாலாஞ்சன் மலித்தீ வந்தா னளவைநா லிலக்கமதுக் கடலு மஃதே. (௧௦)

நிறைகுசைத்தீ வோசனையெட் டிலக்கஞ் சூழு நெய்க்கடலத் தொகையப்பாற் கிரவுஞ் சத்தீ,வுறைதருமோ சனைபதினா றிலக்க மப்பா லோங்குததிக் கடலுமுறைத் திடுவ ரவ்வெண், குறைவறுசா கத்தீவோ ரிரண்டு முப்பான் கூறுமோ சனையிலக்கம் பாலா ழிக்கு, மறைகுவரவ் வெண்ணேபுட் கரதீ வந்தா னறுபானுன் கிலக்கமவ் வெண் ணீரா ழிக்கும். (௧௧)

அந்நீரா ழியைக்சூழ்சக் கரவா ளக்குன் றாயிரமோ சனையகல முயர்ப்பு மஃதே, தொன்னீர்மை தருமதன்மேன் முறையிற் சந்த்ர சூரியர்கீட் டிசையினுதித் திடுவர் மேல்பா,னன்னீர்மை பெறச்சென்றத் தமன மாவர் நவின்றிடுமக் கிரிச்குளன்றி யப்பாற் செல்லார், பன்னீர்மை வரைக்காணப் பட்டுங் காணப் படாதமையா லுமுலோகா லோக மென்பார். (௧௨)

நேமிவான் கி[illegible]ற் புறப்பே ராழி நிகழ்ந்ததைச்சூழ் பூமியும்பொன் மயம தாகுந், [illegible]முறு பாழிசெறி யிருளே மூடுஞ் செங்கதிரோன் சசியிரவு [illegible]ல்லை, நாமமுறு பல்லுயிர்த்தோற் றமுமங் கில்லை நவின் றிடில[illegible]மேடு பள்ள மாகுந், தாமநறுங் குழலாயவ் விடத்தின் றன்மை சாற்றினே மற்றுமினிச் சாற்றக் கேணீ. ()

நாவலந்தீ வேமுதலா மிக்குன் றந்த நவில்கோடி யிரண்டிலக்கமைம்பா னன்கா, மேவமில்பே ராழிவரைக் கப்பா னூல்க ளியம்பியவண் டச்சுவர்மட் டளவை கூறின், மேவருநாற் பானேழு கோடி மேலும் விளம்புவர்நாற் பானோடா றரையி லக்கந், தாவில்வரைக் கப்புறமிப் புறமு மேருச் சயிலநடு வந்தமைம்பான் கோடி தானும். ()

[illegible] மேரு வீரெண் டாழ்ந்தெண்பா னன்குச [illegible], புகலருமுப் பானன்கா யிரம தாகப் புகன் றிடு[illegible]மென் றோது, நிகரில்கொடு முடியிலங்கவில[illegible]க்குப் பூருவதிக் காதி யாக, விகலறுமிந் திரனகர முதலா மற்று மியம்புதிசைப் பாலருறை பதியும் வைகும். (௧௫)

நவமுறுமா கயிலைவளஞ் சேட னுநு நவிலவரி ததிகுய்ய நவிற்றின் மாதே, யிவர்புகழ்சேர் குபேரனுறை திசைக்குக் கீழ்பா லீசானநுறுதிசைக்கு மேல்பா லண்டச் சுவரினுக்குத் தென்பாலா ழிக்குன் றிற்குத் தொகுத்தவட பாற்பகுத்த பதின்மூக் கோடி, நுவலளவை யோசனைதூ ரத்திற் கப்பா னேன்மைபெற விருக்குமது நுவலுங் காலே. (௧௬)

தற்பரமாம் பெரியவட கயிலைச் சுற்றுந் தாவில்வண * பூமியதன் றன்மை கூறி, னுற்பனவந் நிலவளவை பத்துக் கோடி யோசனையோ டிருபத்து மூன்றி லக்கம், பொற்புறுகற் பகம்பாரி சாத மற்றும் பொன்மயமு நவமணியின் மயமு மாகி, விற்பொலியுந் தருக்கள்பல வெங்கு மோங்கு மிக்குநவ நதிமுதலா றநேக நண்ணும். (௧௭)

தாமரைவா விகள்குளிர்செங் கழுநீ ரோடை தண்குமுத மலர்மடுக்க ளநேகம் வைகுங், காமரொளிர் விளங்கும்வரைச் சோதி யாலே கரந்திடுமந் நிலத்திருள்பே ரொளியே தங்கும், பூமருமத் தருவனத்து ணடுவே யோங்கும் பேற்றுபெருங் கயிலாயம் புனித மாகு, மாமறைகாண் பரியசிவன் றனக்கெந் நாளு மருவிரண்டாந் திருமேனி வடிவாய் நிற்கும். (௧௮)

* வணம் - வனம்.

நிலம்பெறுமப் பெருங்கயிலை யகற்சி கூறி னிகழ்த்துமொரு திசையொருபான் கோடியாக, மலைவறநாற் றிசைச்சுற்று நாற்பான் கோடி வகுத்திடுமோ சனைகீழின் றாழ்வு கூறிற்,பிலமுறுகீ ழேழுலக முருவிக் கூர்மம் பிறங்குபதங் கீண்டுவே ரப்பாலோடு, மலைவறுமே லுயரமண்ட முகடு தோயு மதுநாளம் போலேக மாகி யோங்கும். (௧௯)

மேருநிகர் தருவொவ்வொன் றத்தன் மைத்தாய் வெய்யகொலைக் கொடுமுடிக ளளவி லாத, சாருமிகு வளத்தொடுமி லங்கு மந்தத் தனிக்கயிலை சாற்றுகொடு முடிகட் கெல்லாஞ், சேருநடுக் கொடுமுடியிற் சிவலோ கந்தான் செப்புபதின் கோடியொரி லக்கத் தெண்பா, ஞூறுமா யிரமெனுமோ சனைய கற்சி யதன்மகிமை விரித்துனக்குப் புகல்வாங் கேணீ. (௨௦)

ஓரேழு திருமதில்சூழ்ந் திருக்கும் வாயி லுரைத்திடிலொவ் வொருமதிற்கு நான்காந் துய்ய, பாரேழும் புகழ்தரவுன் னினர்க்கே நல்கும் பல்வளங்க ணெருங்கியதி சயமாய்த் தோன்றுங், காரேழுந் தவழெயில்சூ ழவ்வு லோகங் களங்கமறு நவமணியால் விளங்கி யோங்கு, மீரேழு புவனமுமேத் தரிய் சிந்தா மணிமயமீ லாவரைக ளெங்கு மோங்கும். (௨௧)

மெத்துபுகழ் பெருநாறு விதங்க ளாகி விளங்குதிரு வீதிகளு மனேகஞ் சாற்றுஞ், சித்தர்சாத் தியர்முதலாங் கணங்கள் பல்லோர் சிறப்புறவே யவ்விடத்திற் செறிந்து சூழ்வ, ரித்தனையுஞ் சூழ்தருமோர் முதன்மை.யாக வியம்புமதி லுயர்ச்சியரைக் கோடி வாயி, லத்திலுயரோசனையே ழிலக்க மாகு மவ்வாயி லுன்குங்காப் பவரைக் கூறில்.

பரவுவிநா யககணங்கள் வரையே யென்னப் பகர்தருகால் கைகளுடன் றடிகை யேந்தி,யுரவுசெறிந் திடுசொன்ன வாயில் காப்ப ருள்ளிரண்டாந் திருமதிலி னுயர்பு கூறில், விரவுமைம்பா னிலக்கம்யோ சனைநீள் வாயில் விளம்புமுயர் பாறிலக்கம் வாயி னுன்கும், வரமுறக்காத் திடுவர்சிவ பத்த ரான் வலிகெழுதிண் புயஞ்செறிமா கணங்கள் பல்லோர். (௨௩)

மூன்றுமுட் டிருமதிலி னுயர்பு கூறின் மொழிகுவரவ் வரைக்கோடி வாயில் கூறி, லேன்றுதி னுயரமுமைந் திலக்க மன்ன வெழில்வாயி னுன்குங்காப் பவரியா ரென்னி, லூன்றுதி வேதாள கணங்க

ள் பல்லோ ரோங்குமடல் வச்சிராயு தங்கை யேந்தி,யான்றுதி காவல் புரிந் திடுவ ரின்னு மவனுறைவர் சிலரவணைப் புகல்வாங் கேணீ. ()

சிவகதைகள் சிவாசமங்க ளன்பா னுளுந் தேர்ந்துணரும் பெரி யோர்முக் கண்ண ராகித், தவறறுநித் தியத்துவம்பெற் றிருப்ப ருள் ளிற் சார்ந்திடுநா லாமதிலி னுயரஞ் சொல்லி, னவையறுமைம் பா னிலக்க முயர்பு வாயி னுன்கிலக்கஞ் சங்கட்ட கணங்க ளங்கை, யுவ மையில்வெங் குலிசியராய் வாயி னுன்குங் காப்பர்சிவ சாரூப ருறை வ ரங்ஙன். (உ௫)

ஐந்தாமுண் மதிலினுயர் புணர்ந்த கூறி லரைக்கோடி யோசனை மூன் றிலக்கம் வாயின், மைந்தார்சுப் பிரமணிய கணங்க ளாறு வத னங்கள் விளங்கிடவே லங்கை யேந்தி, முந்தார்வ முறவாயி னுன்குங் காப்பர் மொழிதருசா மீபபத மடைந்தோ ரென்று, நந்தாவவ் வாவ ரணத் துறைவர் வேண்டு ந றியபதார்த் தத்துநித்தந் திருத்தி பெற்றே.

ஒப்பரிய தாய்ச்சுவர்க்க லோகத் திற்கங் குரித்தாம்வத் துக்களவ னுடைத்தாய்ச் சொன்ன, வப்புவனத் தேவாண்டி லீரைஞ் ஞூறு ண் டனுபவிக்குஞ் சுகமொருநாண் மத்தியா னத்தாஞ், செப்பரிய சி வனருளா லவனுற் றோர்க்குத் தேடிக்கிட் டாதவத்து வெல்லாங் கி ட்டு, மைப்புயன்மே னியன்விதியா லளக்க வொண்ணு வளத்தினிலி ங் கறிந்ததுநாம் புகன்றே மாதே. (உ௭)

நவிற்றிடுமவ் வாவரணத் துள்ளி லாறு நன்மதிலி னுயர்புமனை க் கோடி யாகும், பவித்திடும்யோ சனைவாயி லிரண்டி லக்கம் பகர்ந் திடுவ ருன்னதமவ் வாயி னுன்கின், புவித்தலமேழ் புகழ்கிழை வாயி லொன்னிற் புழைக்கைமத வேழமுக னுலக கற்சி, கவித்திடும்யோ சனை யைம்பா னிலக்கஞ் சூழ்ந்து கனம்பெறுமே ழாவரணத் துடனே வைகும். (உ௮)

விக்கினே சுரகணங்க ளநேக ராதி வேழமுக னைத்துதிக்கும் ப ந்தர் பல்லோர், முக்கணுடைச் சோடசவைங் கரரின் னோர்கண் மொழிதருமவ் விடத்திற்சூழ் திருப்பர் நள்ளிற், றக்கநலந் தருமோ ா லயம்வி ளங்குஞ் சாற்றுறுமவ் வாலயத்தி னிடத்தைக் கூறின், மைக்குழலாய் நாற்றிசையுமிருபத் தொன்றும் வகுத்திடும்யோ சனை லிலக்கம் வகுப்பா மின்னும். (உ௯)

அத்தகைய சினகரத்து ளிருக்கு மோர்பா னைந்திலக்க மகன்றுகி ா ரணியா லோங்கி, மெத்துமொளிர் மாணிக்க மயம தாகி மேன்

மைபெற வளரரியா சனத்தின் மீதே, [illegible] கணபதியாங் கனி
து மேவும் யோகர்சன ரதியராங் குவ[illegible]போ றறப், பத்தியோட
க் கணபதிதன் னனுக்கை பெற்றுப் பத்த[illegible]வ் வாலயத்தி னுள்ளி
ற் செல்வார். (௩௦)

மேற்றிசைவா யிலிற்சுப்பிர மணிய லோகம் விளம்பிலகைக்
கோடியோ சனைவி சாலஞ், சாற்றிடுமே ழாவரணத் துடனே வை
குந் தங்குவர்சுப் பிரமணிய கணங்கள் பல்லோ, ரேற்றமுறுங் குக
சாரூ பத்தைப் பெற்றோ ரெண்ணிலர்சூழ்ந் திருப்பரதி னிருக்குங்
கோயில், போற்றிடும்யோ சனைபதினெட் டிலக்க மாகப் புகன்றிடு
வ ரகற்சியின்னும் புகல்வாங் கேணீ. (௩௧)

மணிகள் * பல சாமரங்கள் விளங்க ரத்ந மய[illegible]
தப் புரத்துண் மன்னும், பணிகிளரவ் விமானமத்[illegible]
பரியவயி டூரியத்து மயம தாகி, யிணையிலரி யாச[illegible]
க மியம்பியயோ சனையகன்றே யிருக்கு மாங்க, [illegible]ரு
ங்குந் தெய்வ யானை யணங்குவள்ளி மேவவமர்ந் திருக்குங் கந்தன்.

முனைவடிவேன் முருகேசன் வடிவம் பெற்றோர் மூதுணர்யோ
கியர்சனகா தியர்மற் றுள்ளோ, ரனைவரும்போற் றிப்பிரியா திறை
ஞ்சி நிற்ப வருள்கொழிக்கு மவனருள்பெற் றனுக்கை பெற்றே, வி
னைதவிர்மெய் யன்பினரா லயத்துட் செல்வார் விளம்பியதென் றி
சைவாயின் மேன்மை கூறி, னினைவரிய தனிப்பொருளா மகோர
மூர்த்தி நிலவுலக மகற்சியகைக் கோடி யாகும். (௩௩)

பன்னருமே ழாவரணஞ் சூழ வைகும் பயங்கரமா மகோரக
ணம் பலருஞ் சேர்வ,ரன்னதிலா லயத்திலரி யாச னத்தி லமர்ந்தருளு
மாதியரா மகோர மூர்த்தி,யின்னருள்பெற் றாலயத்தி னுள்ளிற் செல்
வா ரெம்பிரா னன்பர்வட வாயி றன்னிற், றன்னிகரி லாவாம தேவ
லோகஞ் சாற்றுவர்யோ சனையகற்சி யிலக்க மைம்பான். (௩௪)

ஓரேழா வரணஞ்சூழ்ந் திருக்கு மாங்கே யுயர்வாம தேவகண
முவப்பின் வைகுங், காரேழுந் தவழ்மதில்சூழ் கோயி றன்னிற் கதி
ர்விரிமா ணிக்கவரி யாசனத்துப்,பாரேழும் புகழாதி வாம தேவப் பர
மனினி துறையுமவ னநுக்கை பெற்றே, யீரேழு புவனமும்போற்
றிடமெய் யன்ப ரிருமைதரு மாலயத்தி னுள்ளிற் செல்வார். (௩௫)

* மணிகள் - ஒலிக்குமணிகள்.

எத்தியவிவ் வாவரணத் துள்ளின் மேவு மேழாமா வரணமதி னு பரங் கூறிற், பூத்திடுமோ சனையைம்பா னிலக்கம் வாயில் பொருந் துமுயர் யிலக்கமதிற் பொருந்தி நாளுமாத்திகர்சூழ் தருபிரம தகணஞ் செங்கை யடலயிற்சூ லந்தாங்கி வாயி னுன்குங், காத்தளிப்ப ரன்னர னுக் கையினு லன்பர் கருதருமபே ராலயத்தி னுள்ளிற் செல்வார்.()

சொல்லியவே ழாவரணத் தகற்சி மூன்று தொகுகோடி யிலக் கத்தா யிரமெண் பானு, மெல்லொளிசே ராவரண முள்ளி லைந்துண் டியம்பிலவற் றகற்சியுமேழ் கோடி காண்க, மல்லல்செறி யைந்தினி ன்மூந் தியதாச் சொல்லு மதிலுயர்ச்சி யோசனையைம் பானி லக்கம், பல்லுலகந் தந்தபரா சத்தி லோகம் பகர்தருமவ் வாவரணந் தன்னின் மேவும். (௩எ)

அம்பையுமை சாமீப மடைந்து ளோர்க ளாங்குறைவ ரவ்வுலகி ன றலமைம் கூறி, லும்பர்தொழ விளங்குபஞ்சா வரணஞ் சூழு மொ வ்வொன்றி னுயரமும்யோ சனையைம் பானு, நம்பியவா வரணசத்தி யநேகர் சூழ நாப்பணுறைந் திடுவள்பரா சத்தி கோயி, லிம்பர்புகழ் த ருகோடி யுயர மாகுமியம்பியயோ சனையதன்சீ ரின்னுஞ் சொல்வாம்.

ஒளிருமிரத் தினவயிடூ ரியமா ணிக்க முரைமாற்றி லாப்பசும் பொன் னிவற்றி னுலே, தளவிசைசேர்த் தொன்றினுமொப் பிட வொண் ணுத தாவிலொளிக் கிங்கிணிக ளநேக நாற்றி, யளவில்விதா னங்கொடிதோ ரணமேற் கட்டி யணிகிளர்பூம் பந்தர்மற்று மலங்கா ரஞ்சேர், கிளருமிரத் தினதீபம் விளங்க வெங்குங் கேழ்கிலர வோங் குகர்ப்பக் கிருகந் தன்னில். (௩௯)

யோசனையைம் பானிலக்க மகல மாகி யொளிருமிரத் தின மயமா யிலங்குஞ் சிங்க,வாசனத்தி லினிதிருக்கு* மாதி சத்தி யன்னவ ளுன் னதநாற்பா னிலக்க மென்ப, மாசின்மதி யனேகமவ ணுதித்தா லென்ன வண்மைபெறு திருமேனி பிரகா சிப்பத், தேசுபெறு திருவ ழகி னதிக மாகிச் சிறப்புறுபல் லலங்காரத் துடனே கூடி. (௪0)

அராகமெனும் பாசங்கோ பாங்கு சத்தோ டபயவர தமுமிளிர்பே ரங்கை தாங்கி, நிராகமுறு மெய்யன்பர்க் கருளுங் கண்க ணீண்டகன்று விரவுபெருங் கருணை நல்கப், பராகமுறு விம்பநறுங் கனியே யென்னப் பவளவள் வாயதர மழகு வாய்ப்ப, வராகனிடைக் கண்டு நிறை காணு ணுத மாறிலாப் பொன்னேலை குழையின் மல்க.(௪௧)

* இனிதிருத்தல்-சுகாசனத்திருத்தல்.

திருவடியி னிரத்திநறா புரமின் றூர்[illegible] செங்கழுநீர் சண்பகந் தண் கருநன் னெய்தன்,மருவளர்ம[illegible]ரார்பி லங்கச் செம்பொன் மாசிலுடை யுத்தரிகம் வனப்பு நல்[illegible]வடிவா யினிதமருந் தேவி தன்னை யாயிரங்கண் ணன்முதல்விண் [illegible]வர்தாழ்ந் தேத்தப்,பருவமுகிற் குழல்விசயை சயைமுன் னுன பாங்கிபர்பூ சிப்பமகிழ்ந் துறைவா ளென்றும். (௪௨).

சந்திரகலை போலொளிருந் தேவி தன்னைத் தனிப்பிரம ரந்திரத் தா யிரம்பைந் தோட்டுக், கந்தமலி பதுமவா சனத்தி னுள்ளங் கருதியுறை யருள்வடிவந் தியானஞ் செய்யின், முந்துகவி வாணரென வாக்குண் டாகு மொய்யொளிப்பொன் னிறமாக விதையத் தெண்ணி,னந்தலில்வெம் பாவமெலாம் விட்டு நீங்கு நவிலரு சத்துருக்க ளுச மாவார். (௪௩)

சத்துருவா லுளவுச்சா டனமுன் னுகச் சாற்றி[illegible]கருமமு[illegible] போய் நாச மாகுஞ், சித்திரரத் தினசிங்கா சனத்தி[illegible]தெள்ள முத மயவடிவாந் தேவி தன்னைப்,பத்தியொடுந் தியானிக்கில் வாக்கின் மேவும் பைங்கருப்பஞ் சாறமிர்தம் பசுந்தே னின்ன, வொத்திருக் குங் கவிதைகங்கைப் பிரவா கம்போ லுதித்துலகெங் கும்பரவு முண்மை மாதே. (௪௪)

கடைக்கணரு ளாற்படைப்பன் கமலன் கண்ணன் காப்பனுல கனைத்துமுருத் திரனந் தத்திற், றுடைப்பனிவள் பெருமையெவ ருரைப்பார் மூன்று தொழிற்குமுதற் காரணிமா மாயா சத்தி,யுடைப் பொருளீங் கிவளெனவோர் கணப்போ தேனு முள்ளத்திற் பாவனை செய் திருக்கிற் றீமை, யிடைப்படியார் திரைக்கடல்சூ ழுலகுக் கெல்லா மிவர்தாமே யதிபதியா யிருப்ப ரென்றும். (௪௫)

பெருங்கயிலை நடுவினிற்கற் பகநன் னீழற் பிறங்கிரத்ந சிங்கவா சனத்தின் மீதே,மருங்கின்மனோன் மனியான தேவி தன்னை மனத்தினிற்பா விப்பவர்புண் ணியசொ ரூபர், நெருங்கியசெல் வத்தினரு மவரே யிந்த நீணிலத்தி லிருந்திடுமவ் வளவு கால, மருங்கொடும்பா வமும்பயமு மிலையந் தத்தி னவள்பதத்தி,லுறுவரிகற் கைய மின்றால்.()

பரசிவனோ ரிடப்பாக மேனி யாகிப் பரையாகி விளங்கியமுக் கண்ணி தன்னை, விரசுறுமெய்த் திடபத்தர் விமல மாகு மிக்கபெருங் கயிலையிற்சென் றடைவ ராங்க, ணரசிருக்குந் தேவியனுக் கையினைப்

பெற்றே யன்பினரவ் வ லயத்தி னுள்ளிற் செல்வார், பிரசமலர்க் குழலாயிங் கிவற்றி னுள்ளிற் பிறங்கிரண்டா மாவரணம் பேசக் கேணீ. (சஎ)

கோடியோ சனையகல மதனிற் பாதி கூறிடுவர் மதிலுயர்ச்சி ய திற்பீ டத்தி, னுடியதொல் லறத்துருவா மிடப தேவர் நயந்திருப்ப ரவருயர்பைம் பானி லக்க, நீடியவா ளவையுமவ் வளவாம் பீச நீள மைம்பா னுயிரமோ சனைகோ சந்தான்,றேடியயோ சனையாமோ ரில க்க நீளஞ் செப்பிலொவ்வொன் ரேரிலக்கங் கோட்டி னீளம்.(சஅ)

காலினீ ளமுமிருபா னைந்தி லக்கங் காதுமொவ்வொன் ரேரி லக்கங் கழுத்துக் கூறி, னேலுமுயர் பைம்பானு யிரமா மூக்கு மியம் பிடுமத் தொகையகலங் கண்ணுஞ் சொல்லுஞ், சாலுறுபல் லொவ் வொன்றி னிடத்தைச் சாற்றிற் சகத்திரமைந் தாமிடப தேவர் மூச் செ லுறுகாற் றிற்றனிமா மேரு வாதி பனிவரைகள் கடல்கண்டு நடுங்கு மன்றே. (சகூ)

வெள்ளிவரை யிஃதெனவே மேனி யெங்கும் வெண்மைநிறம் பொங்குமவ ருங்கா ரத்தாற், றள்ளரிய பிரளயகா லத்து வாயுச் சஞ் சலமுற் றெடுங்குமதி பெலமொப் பின்று, மெள்ளருந்தம் வேகத் தான் மனவே கத்தோ டியைவாயு வேகத்தைச் செயிப்பர் சேந்த, வள்ளிலோ நுதிமூக்கி னுதியிற் சேர்த்தி யசையிட்டாங் கிருப்பர்க ண மனேகர் சூழ. (ருo)

எழுதரிய நால்வேதம் பாதந் தூய வியற்றரும மேனிமுகம் பனை யே நாதம்,பழுதகலு மிருசிருங்கம் விந்துக் கண்கள் பகர்குடிலே வள ர்கன்னம் பாவ மண்டங்,கெழுதருவா றிரோதையதா மிடப தேவை க் கிளர்தருநெஞ் சினிலுருவந் தியானித் தேத்தி, லொழிதரும்வெம் பவஞ்சத்து ருநாச மாவ துறுஞ்சகல சித்தியுஞ்சத் தியமீ துண்மை.()

பத்தர்களா மனைவருக்கு நன்மை செய்தே பாங்கினொடு மாங் குறையு மிடப தேவைப், புத்தியுற வீழ்ந்திறைஞ்சி யனுக்கை பெற் றுப் புகழ்ந்தன்ப ராலயத்தி னுள்ளிற் செல்வார், முத்தநகை வினமி னாகே ளிவற்றி னுள்ளின் மூன்றுமா வரணமும்யோ சனையோர் கோடி, யத்தினிடை மதிலினுயர் பிலக்க மைம்பா னதிலாதி சண் டேச ரமர்வ தென்றும். (ருஉ)

விளங்கியகே தனங்கள்கொடி யாடை முத்து மேற்கட்டி யிவற் றினலங் கரிக்கப் பட்டுத், துளங்கொளிய பவளத்தூ ணிறுவிச் செய்

ய தூயமா ணிக்கமதில் செய்து மிக்காய் ...கமறு நானுவத் து க்க ளோடுங் கதிரிரவி யொருகோடி ...லென்ன, வளங்கெழு மா ளிகைகண்மணி மண்ட பங்கண் மன்... றை யிடங்கள்பல வி ன்னுஞ் சொல்வாம். (ருங)

சந்திரகாந் தங்கள்குளிர்ந்தமுது பில்கத் தளவிசைகள் செறித்து நவ மணித்தூ ணட்டி, விந்தைசெறி தருசுவரு மவற்றுற் செய்து மேன்மைபெறு மாணிக்கக் கொடுங்கை சேர்த்து, நந்தலிலு னுவித மா மணியின் பாவை நாடகஞ்சேர் மண்டபங்க ணடுவ ணோங்கி, யந்தமுறு செம்மணிவே திகைய னேக மதிசயமா விளங்குமவ்வா வர ணந் தன்னில். (ருச)

பரவுசிவ காரியங்கள் பரிக்குந் தூய பண்பு... வெம் பவங்க ணீக்கி, வரமுதவும் பெருமையினு... வளராதி சண்டேச ராங்கு மேவித், திரமுறவே ... கள் பல்லோர் செறிவரொழு கன்னியர்க ளிர்க்கை ... யட்டவயி ரவரனேக யோகர்சன காதியராங் குறுவ ரின்னும். (ருரு)

ஆரணர்நா ரணர்செறியிந் திரர னேக வாயிரகோ டியரளவி ட் டறிய வொண்ணுக், காரணமா முனிவர்சிவன் கருணை நல்குங் காலம்பார்த் திமையாநாட் டத்தோ டங்ஙன், பூரணமாம் பரம்பொ ருளைத் தியானித் தேத்திப் பொங்குமல மகன்றிவொ ரிருப்பார் கொ ங்கை, வாரணிகே ளித்தனையா யிரங்கள் போன வருகற்பம் பிரளய மென் றறியா ரன்னோர். (ருசு)

சண்டேச ருலகறியப் பெறுவோர் தாமே தருமத்தி னுயர்ந்த வர்மெய்த் தவத்தின் மிக்கோர்,வண்டேயு மிதழியந்தார் வேணி யன் பு வழங்குதற்குப் பாத்திரமு மாவ ரார்வங்,கொண்டேயு மத்தேவை க் கும்பிட் டன்பர் கூறரிய வனுக்கைபெற்று லயத்துட் செல்வார், பண்டேயு மொழிமடவா யிவற்றி னுள்ளிற் பகர்நாலா மாவரணம் பகரக் கேணீ. (ருஎ)

நந்தீச ருறைவர்சிவ கணங்கட் கெல்லா நாயகமா வக்கணங்கள் சூழ்ந்து போற்ற, விந்தீசன் றனக்கிரண்டா மீச னென்ன மமுவுழை பொன் மணிப்பிரம்பு சுரிகை தரீங்கித், தந்தீச னுதவுபிறை வேணி யோங்கத் தந்திபுலி யுரியுடையுத் தரிக மாக, விந்தீசன் போன்றுப்ர சன்ன மாகி யெழில்வதனந் தொழுபவர்க்குக் கருணை நல்க. (ரு...)

கந்தரத்தில் விடமிலக்க வக்க மாலை கவின்பெறமுத் தாரவட மார்பின் மல்கச், சந்தரத்தோற் றியிற்றிரிபுன் டர்வெண் ணீறு துல ங்கிடச்சா மளவல்லி யிடப்பான் மேவ, வந்தரத்தர் யோகர்நறு மல ரிட் டேத்த வருமரை துதிப்ப வவைகொண் டேதாஞ், சிந்து ரத்தி னுரிபோர்த்த சிவனை சிந்தை செய்திருப்பர் நித்தியதத் துவம் பெற் றோங்கி. (௫௯)

அரனுறையுஞ் சிவராச தானி தன்னி லாதிசிவ கணத்தோடு மிரு ப்ப ரந்த, வுரனுறுமா வரணவிரி யிருபத் தைம்பா னுரைத்திடும்யோ சனையிலக்க மிலக்க மைம்பான், பரவுமுயர் பயன்மாலெல் லோருஞ் சொல்லும் பரனனுக்கை யின்றியப்பாற் செல்லக் கூடா, விரவுறு மெய் யன்பாக்கே வனுக்கை பெற்றே விமலனுறை யாலயத்தி னுள் ளிற் செல்வார். (௬0)

...மொப்பத பூங்குழலா யிவற்றி னுள்ளின் மன்னுமைந்தா ... லிருபத்தைந் திலக்கம்யோ சனையாந் துங்க மியம்புமறைக் கோடியத னடையா ளத்தைச், சொருபத்தை யின்ன படித் தென்றுங் காணூர் தூமறையா யிரமுகத்துச் சேடன் மாயோர், றிருமித்த சிவனுமையா ணந்தி தேவர் நிகழ்த்தியவிம் மூவருமே யறி வர் நீங்கார். (௬௧)

அம்பையுமை யொடுமீசன் விளையா டற்கே யாடிடமா வமைத் தசிவ ராச தானி, யும்பர்தொழு மதற்கிணவே றியம்ப வொண்ணு புரைத்திடுமவ் வாவரணத் துள்ளி லந்த, நம்பனுறை தருமந்தப் புர மொன் றுண்டு நாற்கோடி யோசனையா மகலஞ் சூழ, வம்பவிழ்பூ ந்தனமா வனங்க ளோடை வாவிகிண றமிர்தநதி யனேகம் வைகும்.

சிந்தித்த துதவுசிந்தா மணிமா ணிக்கத் திண்ணியமால் வரைகள் பல வவற்றின் மீதே, வந்தித்த பொன்மயமாந் தருக்கண் மல்கும் வகுத்திடிலொவ் வொன்றினுயர் பிலக்கஞ் சொல்லும், பந்தித்த யோ சனையத் தருக்கள் பூவும் பலங்களுமபைந் தளிர்களுமெந் நாளும் பல் கி,யந்தித்த பணைகவடு சாகைபோக்கி யமைந்துதழைத் திடுமொருபா லனேகங் கோடி. (௬௩)

பதுமரா கத்தருவிந் திரநன் னீலப் பைந்தருப்பன் மணித்தரு வெவ் வேறு நாளு, விதமுறுமென் றுகிர்த்தளிர்மா ணிக்கப் பூன்னம் விளங்குதரு மலரொருபாற் கனிக ளோர்பாற், புதுமைதருந் தருப்

பூவி னிதழின் பேதம் பொங்குநிறத் தருவிரத்நக் கனிகண் மல்கி, ய திகாசந் தருந்தருவாங் கனேக கோடி யான்றமணி மண்டபங்க ணடு வி னோங்கும். (சுச)

புகலுறுமத் தருவனத்து ணடுவிற் றூய பொன்மயமா கியநீபங் கதலி புன்னை,மிகலுறுசண் பகமகிழ்மா தளைப லாசு மிக்கமா விருச நறு நரந்தந் தால, மகலிடமெங் கும்புகழ்நன் னெளி கேர மாலரசு பச்சிலைமல் லிகைநற் சந்தந், தொகலுறுநாண் மலர்ச்சிறுசண் பகம் வா னோங்கித் தூமலருங் கனிகளுமெந் நாளு நல்கும். (சுரு)

மற்றுமுள பல்வளங்க ளனேக மாங்கண் வைகியதி சயம்விளை க்கு நான பேதத், துற்றிடுபுள் ளினமிருக மார்ப்பி னெங்கு முறும வையி னவமணிப்புள் ளொளிரும் பொற்புண், முற்றியபன் னிறச்சி றைப்புள் ளனேக மோர்பான் மொய்த்திடும்வால் செவிகளுமந் நிற மே யாகத், துற்றமிரு கங்களுமந் நிறமே முற்றுந் தோய்ந்தமிரு க ங்களுமாங் குறையு மோர்பால். (சுசு)

மாணிக்கக் களிற்றினங்கள் பிளிறு மோர்பான் மயில்குயில் பொற் சாதகங்க ளொலிக்கு மோர்பால், வேணிக்கந் தரன்கயிலை ய க்கி ரத்தில் விளங்கிடுமிவ் வளத்தொடுமவ் வனமற் றுங்கே, பூணிக் கு மான்சயின்மாப் பிடியைத் தந்தி பொருந்துதல்கண் டவ்விறைவ னிறைவி யோடும், பாணிக்கு மவ்வுருவாய்க் கூடி வேழப் பனைக்கை முக விநாயகனை நல்கி னானே. (சுஎ)

கூறியநந் தனவனத்தின் பெருமை யாரோ கூறுவரிம் மரக்கோ ட்டி னுனிக்கொம் பிற்கே, மாறகலிந் திரனுடைநந் தனங்குபேரன் ம ருவுசயித் திரவனமு மொவ்வா தங்ஙன், வீறியவோ டைக்குயர்பா லாழி யொவ்வா மேனிலமே டைக்கொவ்வா மேருத் தீவந்,தேறியமி ன் னேமற்றை வனத்திற் சியஞ் செப்புமிதிற் சிறுமுயற்குட் டிகளுக் கொவ்வா. (சுஅ)

ஈசனுக்கு நிகர்தேவுந் தொகுத்துச் சொன்ன விருங்கயிலைக் கி ணைவரையு மிலையீ துண்மை, பேசுறுமவ் வனத்தினடு வமிர்த வோ டை பிறங்குமவ்வோ டைக்கரையிற் பொன்னி னீபந், தேசுறுமாக் கதலிவளர் நாளி கேரஞ் செழுங்கமுகு சூழ்தரவந் நடுவண் வைகும், வீசுபெரும் பரஞ்சோதி வடிவ மாகி மிக்குயருஞ் சபைமூன்று விள ம்புங் காலை. (சுகூ)

ஞானவடி வாயிருக்கு ந சபையைச் சூழு நலந்தருமே ழாவர
ணம் வாயி னுன்கு, மானமுறு சிவகணத்தர் வசிகர் காப்பர் மன்னி
பூ ருவத்திரசி தசபை நீண்ட, பானல்விழி யாய்வடபா லம்பொன்
ன்றும் பரவுமிரத் திலசபை சானத் தாகுந், த்னமது மிளிர்கரு
ப் பச்சை யாதி தாவின்மல யால்விளங்கிச் சோதி யாகி. (எ0)

முத்தியளித் திடுபரமா விசால மாகி முயங்குமிரத் தினசபை
ன் முதல்வி காணச், சித்திதரு சிங்கார நிருத்தஞ் செய்யுந் தெளி
டையோர் கண்டுதொழுஞ் செம்பொன் மன்றி, லத்தன்மகா சதா
வநன் னடனங் காட்டு மாதியிர சிதப்பொதுவி லதிர வீசி, நித்திய
ஞ் சதாசிவநாட் டியத்தைக் கூட்டு நிகழ்சபையின் பெருமையெ
மா னிகழ்த்த லாமே. (எக)

பதியாறு மலரின்மண மெங்கும் வீசப் பூமலர்த்தா தளைந்துகு
ர் வந்து வீசத், துதிசெயுமா மஞ்ஞைகுயில் செவியி னேற்பத்தும்
ரு நல்லீணு காளம் பண்ணப், பதியெனுமா பரனடிக்குஞ் ச
பகண் மூன்றும் பண்புறவே விளங்குமவ ணந்தி தேவ, ரதிகவிற
சிவகணங்கள் சனகர் யோக ரரியயனிந் திரன்முதலோ ருச்சித்
தத்த. (எஉ)

நவ்விவிழி யாயுயர மிலக்க மைம்பா னவின்றிடும்யோ சனைபதி
ன் லிலக்க மாகிச், செவ்விபெறு திருமேனி யகன்று கோடி செங்
திர்ப்பேர ரொளியம்பொன் விமான மீதி, லவ்வியந்தீர்த் துறையும
சதாசி வந்தா னுதிவெளி விளைந்தருளே பழுத்துத் தானே, யெவ்
மின்மே லெவற்றிற்கு மேல தாகி யிருங்களியே விளைந்தெவர்க்குந்
ஞெ ணுதாய். (எங)

அளிவிளையு மெய்யன்பர்க் கருளின் றூய வானந்த வொளிவிளங்
முகங்க ளையைந், தெளிதெனவெண் ணருஞ்சூல முதல தாங்கு மி
யி திருக் கரங்களைம்பான் கண்கண் மூன்றுந், தெளிதரப்பெற் று
துபிறை முடிக ளோங்கச் செம்மணிப்பூ ணணிந்திரவி கோடி
யன்ன, மிளிருநவ மணியரியா சனத்தின் மீது வேதனெடு மாலருச்
த் திடவே மேவும். (எச)

தருமசரு மாவிவற்றைப் புகலக் கேட்குந் தையல்புகல் வாடவத்
தா யயன்மால் யோக ரருமறையா லளந்தறிதற் கரிதா யோங்கு
ாதிசபை யினிற்புரியு நிருத்தன் றன்னை, நிருமலையா மளவல்லி நீங்

க லாக நிகழ்த்துதிமற் றையர்தெரிசித் தவரின் னொன், றொருமை பெற வினவுதல்கேட் டீனாசெய்வாமென் றுரைசெய்வா னம்முனிவ ன் மனைவி கேட்ப. (எடு)

மாசதா சிவநடன மம்மை காண மகிழ்வினெடும் புரிந்தருளி ய நேகங் காலங், தேசதா மெனவுறையு மண்ண லந்நாட் செங்கண்மா ன் முதலியர்நன் னடனங் காண்பா, ராசைதாம் பெரிதாகி யிந்நாள் காறு மருந்தவஞ்செய் குனர்தெரிசித் திடுவிப் போமென், றுரைசை தாழ் திருவுளத்தி னுன்ன வன்னே ருற்றனர்ஞா னக்கணவர்க் குதவி னுல். (எசு)

வேறு.

ஆங்கவர் காணப் புரிநிருத் தத்திற் கியையவா ஞசுர னகிலத், தோங்கிய வதரு வணமறை விதியா லொலிமிகுங் குடமுழா வதிர்ப் பப், பாங்கொடு நெடுமான் மத்தள முழக்கப் பங்கயன் றாளமொத் திசைப்ப, வாங்கரும் பானு கம்பனு யிரஞ்செவ் வாயினுற் சங்கெடுத் தொலிப்ப. (எஎ)

மூவிரு பாதன் சதசிர சேனன் மொழிதரு கணேசரிங் கிவர்க டாவரு மொலிசேர் தமருகம் விதியின் சதியின்வா சிப்பவர்க்காக்கன் மேவரும் பேரி வாத்தியங் கொட்ட வேணுகம் பனரிசை மிழற்ற வேவரும் பரவு மங்கிலர் கும்போ தரரிருங் கொம்பெடுத் தூத.(எஅ)

நந்திமா தேவர் பொற்பிரம் பெடுத்து நாட்டியச் சபையினர்ப் படக்கி,வந்திடு மிமையோர் குழுவினைத் தத்தம் வரிசையின் முறைமு றை நிறுவி, யிந்துவே ணியனுர் திருமுன்ன ருலாவி யிருமருங் கினு மெதிர் நடந்து, பந்தமாம் வினைதீர் சீர்த்தியை யெடுத்துப் பகர்தரு ங் கட்டியம் படிக்க. (எகூ)

மற்றைய கணங்க ளிற்சிலர் வீணை வாசிப்ப வவர்களிற் சில வர்,துற்றிடு மற்றைத் தமருக முதல வாத்தியத் துழனியார்ப் பெடுப் பக், கற்றையங் கூந்த லரம்பையர் கமலக் காலிற்கிங் கிணிசிலம் ப ணிந்தே, யுற்றவே ழிசையின் கானவ ரமுத மொண்குழைச் செவி யினின் வார்க்க. (அ0)

சாமரங் குடைபா வாடைநீள் விருது கொடிசில தையல ரெடு ப்பத்,தோமறு சந்தக் குழம்புகொண் டிமையோர் தொழச்சில தேர் கைய ரிறைப்பக், காமரு தூப தீபத்தட் டேந்திக் கன்னியர் சிலர்பு

ரி மாற, மாமறை விரிமா மங்கலம் பாடிப் பலாண்மொ தரிற்சி
ர் கூற. (அக)

விசையையே சேனையாம் பாங்கிய ரோடும் வேழமா முகன்குக
னன்னு, மிசைபெறு மைந்த ரிருவர்க ளோடு மெம்பெரு மாட்டி
ண் மகிழ்ந்து, நசைதரு கயற்கட் பார்வையி னுலு நலந்தரு புன்ன
க யாலும், திசையெலாம் பரவு திருநட்டம் விளங்கச் செய்துகெம் பீ
மே செலுத்த. (அஉ)

தெரிதரு பதினே ருருத்திரர் மற்றுஞ் செப்பிய வுருத்திர கண
க, ளரியயன் மகவான் முதற்றிசைப் பால ரவரவர் கணங்கள்விண்
ணோர்கள்,விரிதவ முனிவர் சித்தர்க ளியக்கர் விஞ்சையர் சாரண ருர
ர், பரிவினே டிந்து சூரியர் வணங்கிப் பரமவா னந்தத்தின் மூழ்க.()

[illegible] ளெண் வசுக்கண் மருத்துவ ரிராசிபுட் கலமா
[illegible] ளேழிரு புவன நளிகட லேழுமா நதிகள் [வரைகண்
[illegible] குளங்கிண ருவி புகலுமெண் கயங்கண்மால்
ற்றுறு மங்கா லானந்தத் தேனே முகந்துகண் வழியுளந் தேக்க. ()

ங்கரன் கணங்க ளறுமுகன் கணங்க ளாதிசண் டேசன்மா நந்தி
யங்கணும் புகழ்துந் திலர்மகா வாகு வுற்பனர் கிரீசருன் மத்தர்
ங்கிய பிரேங்க ருற்சிலர் கணத்துட் சாற்றுகுண் டிகர்பணி சிரசு
ங்கவைங் கண்ண ரொழுகணர் பூத பசாசுவே தாளங்க டுதிப்ப. ()

வேதநான் காறு சாத்திரம் வேத சிரசொடா கமங்களு லேழு,
காதிலா வுபநி டதங்கடோத் திரஞ்சூத் திரம்வியாக் கியானங்கண்
ருதி, யாதியீ ரொன்பான் புராணகா வியம்ப்ர வந்தநா டகமலங்
ார, மீதெலாம் பரம வடிவெடுத் திறைஞ்சி யிறைநடந் தொழுது
ாழ்த் தெடுப்ப. (அசு)

த்திரி விண்டு புலத்தியர் புலக ரங்கிராக் கர்க்கர்பார்க் கவர்மா
க்திய வற்சர் குற்சர்கா லவர்நன் னிலைபெறு மிருகண்டு விசுவா [ம
த்திரர் சுகர்மார்க் கண்டர்மத் தியந்தர் வியாசர்மாத் தேந்தினி வா
த்தனே பிரம விருடியர் கணங்க ளிறைஞ்சினர் குணலையிட் டேத்த.

கண்ணுவர் சங்கர் தெக்கர்சம் வர்த்தர் காத்தியா யனர்தொழு
தத்தப்,பண்ணிசை வீணை நாரதர் முதலாந் தேவமா விருடியர் பர
த்,தண்[illegible] சனகா தியசிவ யோகர் தனித்தனி கண்டுதோத் திர
செய், [illegible] சிறந்து நடனவா னந்தத் தேன்முகந் துண்டுக
ா களிக்க. (அஅ)

பம்பிய வெத துந்துபி முழங்கப் பங்கயன் செய்தொழின் மயா க, வம்பிகை தானுந் தாளமொத் திசைத்தே யரகர நடேசவென் றே த்த, வும்பர்நா யகர்பொன் வேணியின் சோதி யோங்கிய திகந்தமும் விளங்கி, வம்பவிழ் குழலா யுலகவான் மாக்கள் வல்வினை மலவிரு கற்ற. (அகூ

சிற்சபை தன்னிற் சுற்றியே நடிக்குந் திகம்பரன் குஞ்சித பத திற், பொற்சிலம் போசை கேட்டுளோர் புளகம் பொலிசிவ மோ த்தி லழுந்தச்,சற்சிதா னந்தத் தாண்டவ ரசத்தைத் தனிவிடை ஞா நேத் திரத்தான்,முற்செலு மன்பிற் பருகியுள் ளுருகி முடிவிலற் புத தொடு மிருப்ப. (கூ0

இத்திரு நடன வானந்தத் தேனுண் டியாவருந் திருத்தியை யடை ந்தார், மொய்த்தெழு வான்பூ மழையம்பொன் மழைநன் முழுநவ ம ணிமழை பொழிந்த,வத்தனு னந்தத் தாண்டவ ராய னனைவர்க்குங் கருணைசெய் தருளி, சித்தமா முத்தி யளித்திட வன்னோர் நிறைபர சோதியுட் புகுவார். (கூக

அனேகமால் பிரம ரனேகமிந் திரரு மனேகமாம் விண்ணவ முனிவ,ரனேகமா யோகர் சித்தரு மனேக மற்றும்விண் ணவர்குழா னேக, மனேகமெய் யன்ப ரனேகமா தவங்கள் செய்தலா லனேகநீ தேக, மனேகனும் பொருளி னிரண்டற வொன்றி யநாதிசா யுச்சிய மடைந்தார். (கூஉ

மாணினேர் விழியாய் தொழுதவெல் லோரும் வழுத்தரு முத்தி யை யடைந்தார், மோனமா யிருந்து நீயுமந் நடன மூர்த்தியைத் தி யானஞ்செய் திடுவா, யீனமார் பவந்தீர் முத்தியெய் திடுமென் றியம் பயான் றியானிக்கும் பொருட்டான், ஞானமார் சபையி னடனமூ த் தத்தின் பிரமாண நவிலெனக் கென்றாள். (கூ௩

என்றவள் கூறத் தருமசன் மாவங் கியம்புவா னீததி குய்யந், தி ன்றுபூங் குழலாய் கற்பின்மேம் படுநீ வினுவுது சொல்லுதல் வழக்கா லொன்றுமன் பினிற்கேண் மாசதா சிவந்தா னுைப்பற நடித்திடு மம் பொன்,மன்றமாம் விமான மொன்றனைக் கோடி யோசனை யுயர்ந் து மரபரல். (கூச

அகலமு முனைக்கு மத்தொகை வாயி லுயரமு மிலக்கமோ ரநூ யான், புகலும்யோ சனையச் சபையினு ளிலங்கும் பொற்பொடு ம

மா றிலக்கம், விகலமொன் றின்றி யுயர்புமத் தொகையா மிரத்ந
ங் காசன மீதிற், சகளநிட் களமா சதாசிவ நடனம் புரிதருந் தைய
கண் டுவப்ப. (கூரு)

செங்கதிர் கோடி யுதித்தென விளங்கித் தீக்கண்ணர் காணுதற்
ரிதாய்ப்,பங்கமின் ஞானக் கண்ணினர் காண்டற் கெளியவாந் தனி
பரஞ் சோதி, யெங்குமா நிறையு நிட்களஞ் சகளீ கரித்துநாட்
டயம்புரிந் திடுமாற், றுங்கமா நடேச னுயரமு மைம்பா னிலக்கம்
யா சனையெனச் சொல்வார். (கூசு)

பாதமோ ரிரண்டு மிருபத்தைந் திலக்கம் யோசனை நீளங்காற் ப
டங்க, ளோதுமைந் திலக்க நீளமா மரையி னகலமு மத்தொகை யு
ராக்குஞ், சோதிசேர் திருமே னியின்வடி வகலந் தோன்றிடு மே
றிரண் டிலக்க,நீதிசேர் காள கந்தர மிலக்க மிரண்டதாம். யோசனை
ளம். (கூஎ)

அருள்பொழி முகத்தி னீளமு மிலக்க மிரண்டியோ சனையணி
க்கின், மருளறு முயர்பு மயுதமா மலர்க்கை நீளமு மிருபஃதி லக்
ந், தெருளுற வுரைக்கின் விரல்களி னீள மிருபதி னாயிரந் தெளியும்,
பொருளுடைப் புரூரந் திருச்செவி திருக்கண் ணீளமும் புகலுமத்
தொகையே. (கூஅ)

இத்திற நடேசன் கேசாதி பாத பரியந்த மியல்பெற விளங்கு,
த்தம மூர்த்திக் கியைந்திட விமல யுருவமும் பொலிதர விருக்கு, நி
தமா மிடப தேவர்நந் தீசர் நிகழ்சிவ கணத்தவ ருருவு, மத்தக விள
ங்கும் புந்தியா லளந்து காணுதி யறைகுவ மின்னும். (கூகூ)

இரசித சபையாம் விமானமு மைம்பா னிலக்கமோ சனையுயர்
கலம், பரவுறு மதிசெங் கதிரொரு கோடி யுதித்தெனப் பல்லொளி
ரப்புந்,திரமுற வுரைக்கு நிட்களந் தானே சகளமாய்த் திருக்கர மொ
பான், வரமுறத் தோன்றத் திருநடம் புரியும் வனிதைநீ யதுமனக்
கொடி. (கO0)

வான்கதிர் கோடி யுதித்தென வொளிரு மிரத்தின சபைமணி வி
ானந்,தேன்கமழ் குழலா யகலமு முயர்புஞ் செப்புமவ் விலக்கமோ
ைம்பா, ஞன்குதிண் புயத்தோ ரைத்தநிட் களமே சிங்கார நடஞ்
செயு முருவா,யூன்கெழு பவந்தீர்த் தருளுமிப் பொருளைச் சபையொ
முள்ளத்திற் கோடி. (கOக)

ஓங்குமப் பொருள்சேர் கொடுமுடி விரிவு மாவர ணங்களு மு ளைத்தேம், பாங்குறு ஞ்சத்துக் கோடியர் மாட மாளிகை யவற்றை ப்பண் புறச்சூழ், நீங்கரும் பரிதி காந்தமாம் பன்னோர் முடிநிக ழுரு த்திர ரிருப்பர், தாங்குமத் தொகையரவற்றைச்சூழ் நூற்றெட் டீணி முடி சந்திர காந்தம். (கo௨)

அவற்றினம் பத்தோர் சத்திகள் பொருணூ லுணர்பவ ரரனு ருப் பெற்றோர், கவற்சிதீர் நவசத் திகளினை யோர்கள் கருத்துறச் சதாசிவப் பொருளோ, யுவப்பொடும் பரவி யுறைகுவ ருவற்றைச் சூழ் முடி யாயிரந் தோன்று, நிவப்பழ னிறந்தாண் டவஞ்சத்த கோடி மந் திர முருப்பெற்று நிலவும். (கo௩)

பகர்தரு மவற்றைச் சூழுமோர் பதினு யிரத்தொரு முடியவை படிக, நிகரறு தந்தி முகன்குகன் சாத்த னிகழ்த்திய வினைசெயு மூவர், மகரவா ரிதிசூழ் புவிபுகழ் காளர் வயிரவ னந்திபிங் கிருடி, சிகரநேர் கணங்க டிறற்சிவ குமாரர் தேனுமால் விடைபடைத் துர்க்கை. ()

சத்திக ளினையோர் தவமுயற் சியினு லினிதிருந் தப்பதஞ் சரிப்பா ர், மொய்த்திடு மவைசூழ்ந் தொன்றுபெற் றிடுமோ ரிலக்கமா முடிம ணி மயத்த, வைத்தமேற் றிசையில் வைகுவர் கோடி நாரணர் ம லத்தினீங் கிடுவார், சித்தசுத் தியினுற் றனிமுத லான சிற்பர மற் பொடும் வணங்கி. (கo௫)

வடதிசைச் சிகரத் தளவிலாப் பிரமர் வைகுவர் முத்தியை விரும் பி, மிடையுமிந் திரர்க ளனேகர்கீட் டிசையின் விமலனைத் தொழு துட னமைவார், படர்தரு தென்பா னெடுமுடிச் சிகரத் துறைகுவர் பரந்தெழு கணங்க, ளிடரறு தவத்தோ ரளவிலர் கருணை யெம்பிரா ன் றன்பத மிறைஞ்சி. (கo௬)

பத்திலக் கத்தொன் றவைமருங் குடுத்துப் பைம்பொனின் விள ம்புமச் சிகரம், புத்திகூர்ந் தாங்க ளுருத்திர கணங்கள் பூதசே னாதி பர் சித்தர், வித்தியா தரர்மா கருடர்கந் திருவர் மேவுவர் சூலமே முதலா, மொய்த்திடுங் கருவி சுரபிநன் மணிநீண் முழுநிதி மொய்ம் மலர்த் தருக்கள். (கo௭)

ஏலவார் குழனற் கணிகையர் நீட்ட மிசையுறத் திரிதவ ணிருப் பார், சாலுமித் தகைய கொடுமுடிக் கீழாய்த் தாவற னின்னோர் திரு க்கும், பாலுறழ் வெள்ளிக் கொடுமுடி யவற்றின் பகர்தொகை கோடி

யா டொன்று, மேலுற வற்றிற் சரிப்பன யாவும் விதம்பெற வர
ாமுறை விரிப்பாம். (க0அ)

பிரணவத் துருவாய் விளங்கும்வெண் ணிறத்திற் பிறங்கிரண்
டாயிரம் வேழ, முரணுறு வேதப் பரிகளுன் முகற்கு முழுதளந் தறி
திட வொண்ணு, வரனொடு முறைவு தனேகமோர் தாள மூன்று
டைத் தாளின வான்ற, காணுறு பொற்றைத் தாள்பல வுடைய தா
ரிலாக் கணங்கணக் கிறந்த. (க0கூ)

ஒருமுகத் தனவோ ரிருமுகத் தணமூன் றுடைமுகத் தன்முக மி
ாத, திருகுவெஞ் சீற்றக் கண்களுஞ் செறிந்த கைகளு மின்னண
ந சிறந்த, மருவுவெண் பிறைபோ லெயிற்றன பிலம்போல் வாயி
ா செம்மயி ரினவாய்ப், பொருவருங் கணங்க ளளவில வின்னும் புக
ுவங் கணங்களின் பொலிவு. (கக0)

மானிடர் பறவை மதகரி முகத்த வரிப்புலி முகத்தவெவ் வழல்
வாய்க்,கானமர் நரிவெங் கரடிமா முகத்த கடியபல் விலங்குமா முக
ந்த, வானபல் பூத மெண்ணில வமல ருணயி னியங்கியாங் கமர்வ,
தூநிற விமானந் தேர்பல பொருந்துந் தொகுத்தல்விண் ணவர்க்கும
் றரிதால். (ககக)

அப்பெருங் கயிலை மருங்குதெத் துயர்ந்த வணிகிளர் கற்பகப்
பொதும்பர், வைப்புறு மண்ட மாதியந் தமுஞ்சூழ் மருங்கும்வீ
ியபணைத் தருக்க, ளொப்பற விளங்கு மாங்கவண் புதுநீ ரோங்கிய
வநதி நண்ணு, முப்பரம் பொருளின் முதலுரு வேண்டி முழுத்தவர்
வம்புரிந் திருப்பார். (ககஉ)

நீடுமித் தன்மை யாயமா கயிலை நெடுவரைக் கொடுமுடி யிலக்
ங், கோடியோர் பதினே ரிலக்கத்தோர் பதினே ராயிரத் தொருநூ
றுங் குணித்து, நாடிய விருபத் தைந்துமென் றுரைப்பர் நவிலுமிக்
யிலையின் றாழ்வின், மாடுசூழ் தரும்பொன் னிலமதிற் கணத்தோ
ருத்திர ராயிரர் வதிவார். (ககங)

ஆங்கவ ருறையுந் தமனியத் தளத்தி னளவையோர் கோடியோ
ஜனையா,நீங்கரி தாமத் தமனியத் தளத்தை நிலைபெறச் சூழ்ந்துகொண்
டிருக்கும், பூங்கதி ரொளியாற் கதிரொளி யகற்றும் பொற்பொடு மி
ளிதுற விளங்கித், தாங்கரும் வெள்ளி மதிலுடுத் திருக்குந் தமனிய வி
ஞ்சியொன் றுளதால். (ககச)

துன்னிய கோடி யோசனை யகன்று தொகுத்திடுங் கோடியிற் கோடி, மன்னியே யூடுபோகிமேக் குயர்ந்து வளர்ந்தன வானுற வோங்கி,மின்னுகோ புரங்க ளெட்டுள வவற்றின் வாயிலின் மேவியே காப்போ, ரின்னரென் றவரைப் புகலுதல் செய்வாங் கேட்டியென் றியம்புவான் முனிவன். (கக௫)

ஐங்கரன் றிகழ்பூ ருவதிசை வீர பத்திர னழற்றிசை தென்பாற் றுங்கமா நந்தி வயிரவன் றென்மேற் றுலங்கிய மூலைமேற் றிசையிற், றங்குவேற் குமரன் வாயுவின் றிசையின் வயிரவி சாற்றிய வடக்கி, னெங்குமா காளர் சாத்தனீ சானத் துறைந்துதங் கணத்தொடும் புரப்பார். (ககசு)

இயம்பிய விவற்றை வளைந்துரு ழரண மொன்றுள வினமணிக் குலங்கள், வயங்கொளி விளங்கி வானுற நிவந்த வன்மனத் தரக்கர்வல் லசுரர்,முயங்கியே சேறற் கரியதாய்ப் பிரள யஞ்செலற் கருமுழுக் காவல், வியன்பெருங் கயிலை நிலையிது புகன்றேம் விமலனே டிது மனக் கோடி. (ககஎ)

வளப்பெருங் கயிலை வண்மையு மூன்று மன்றமு நடேசன்மா வடிவு,மளப்பரி தெவர்க்கு மவனரு ளதனு லறிந்தவா றியம்பின நடேசன்; கிளப்பரும் பஞ்ச சத்திகட் கருளிச் சுவேச்சையா யுறுங்கிள ருருவி, னுளப்படு முரோம மொன்றிற்பல் கோடி யண்டங்க டோன்றியே யொடுங்கும். (ககஅ)

மலரயன் றிருமா லிந்திரன் முதலாம் வானவ ரவனரு ளடைந்து,நிலைபெறுஞ் செல்வ மெய்தின ரவனை நிகழ்த்துமால் கண்மலர் சாத்திப்,பலர்புகழ் சுதரி சனப்பெயர் படைத்த சக்கரம் பெற்றன னெவனு, லலைவறு மவனை யளந்தவன் வடிவம் வருணிப்ப தியாவர்க்கு முடியா. (ககக)

ஊன்மதுப் புசித்த வேடன்பூ சித்தே யுயர்தரு முத்தியை யடைந்தா, ரனவற் குதவு வானெவ னவனை யடைவிற்றன் சரிதையைக் கேட்போர், வானமும் பரவு சிவகதி யடைவார் வந்தருள் வானெவ னவனைப், பான்மைசே ரண்டப் புரவிரோ மனைப்பல் விதத்தினும் வருணித்து முடியா. (க௨௦)

இத்தக விளங்கு நடேசனைக் கயிலை யுச்சியி லிருப்பதாம் நினைப்போர்,பத்தியா யீசன் சந்நிதி யிருந்து பரவுமிக் கதைபடித் திடுவோர்

வித்தகக் கதைகேட் பவர்பவ மகன்று விமலமா கயிலையை யடைந்
, நித்திய போகந் துய்த்திரண் டற்ற நேயமா முத்தியை யடைவார்.

என்றுமா தவத்துத் தருமசன் மாவங் கியம்பலும் வினமிரை கே
ா, நன்றுநன் றென்று கசிந்துள முருகித் தியானித்து நன்மையை
டைந்தாள், வென்றிமா தவத்தி ரத்தக முனிவன் விளம்பிய வாறும
குரைத்தேந், தொன்றுமா கயிலைச் சபையொரு மூன்றுஞ் சூக்கும
ர்க்கியே சொக்கன். (கஉஉ)

நடனவிக் கிரக மாகிய தனையு நவிலருஞ் சூக்கும மாக்கி, யடை
னைப் பொதுவி னுவந்துதா பித்தே யமுதலிங் கத்தினி ஞனன், கட
ல கேத்து மதுரைபூ லோக சிவலோக மாகயி லாயந், திடமுற
ரைத்தேஞ் சத்திய மென்றே செப்பினன் மலையமா முனிவன். ()

ஆறுவது மகாகைலமான்மியமுரைத்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ருருஎ.

---

ஏழாவது

## தேவியறம்வளர்த்தவத்தியாயம்.

வினவு மாதவர் மீளவும் வினவுவார் மெய்த்தமிழ் முனித்தேவே
ணிவி ரும்புவே தாகம முதலிய விண்ணவர் நடங்காணப்
னித சுந்தரன் புரிகிருத் தத்தைநீ புகலக்கேட் டெம்வாழ்ந்தே
னிய மாதவப் பயன்சிவ பத்தியு மெய்தினேங் கதிபெற்றேம். (க)

ன்ன தாயினு மின்னுமொன் றுரைக்குது மாலவாய்ப் பதிதன்னின்
ன்ன மம்பிகை யறம்வளர்த் தனளென மொழிந்தனை யதுகேட்டே
ன்னி பாகன்ற னருளினு லங்கயற் கண்ணிநா யகியந்நாண் [ங்
ன்னு முப்பத்தி ரண்டறம் வளர்த்ததை வகுத்துரை விரித்தென்றார்,

ந்த வாசகங் கேட்டலு மகத்திய னியம்புவான் முனிவீர்காள்
ந்தி கூர்தரக் கேளுமின் புகலுவாம் பூருவ கதைகேட்போர்
ந்தை வல்வினை நீங்கியே சிவகதி முற்றுவ ரிஃதுண்மை
ந்தை செய்குதி ரென்றவ ருளங்கொளத் தெருளுற வுரைசெய்வான்.

வேறு.

ஆதி நாளினிற் சோமசூரியர்முதற் கடவுட
சோதி தோற்றமெற் குரையெனச் சுந்தரி வினவ
நாத னங்கணிற் றோன்றியே நாள்வரி லொடுங்கும்
பாதி மாதுகே ளெனவிளை யாடலைப் பயில்வான். (௪)

வான ளாவிய கயிலையி லரனுமா துமையா
டேன ளாவிய மலர்க்கையாற் றிருவிழி புதைத்தா
ளான காலையி லிருட்பிழம் புருக்கியம் புவியு
மேனை யாவையும் பூசின வாமென விருண்ட. (௫)

நீல மாமலை போற்கறுத் தனநெடு வரைகண்
ஞால மேழ்புகழ் யமுனைபோற் கறுத்தன நதிகள்
சீல மாதவ முனிவர்மே தகுபுவித் தேவ
ரேவுங் தத்தமா தவமுநன் னியமமு மிழந்தார். (௬)

கண்பு தைத்தகை திறக்குமுன் கணமவர்க் குலகிற்
கெண்பு தைத்திடும் யுகங்களு மெண்ணில சென்ற
பண்ப றுத்திடு மன்னவ ணிலைமையைப் பாராத்
தெண்க டற்கடு மிடற்றினன் றிருவுளங் கறுத்தான். (௭)

கறுத்த கண்டனுட் கறுப்பினைக் கவுரிகண் டறிந்தாள்
சிறுத்த குற்றநீ பொறுத்தியான் செய்தது பிழையா
லுறுத்து மிப்பவந் தீர்வழி யுரையெனப் பணிந்தாண்
மறுத்து ரைத்திலன் கருணைசெய் தருளியே வள்ளல். (௮)

எத்த லத்தினுந் தீர்வுறு திப்பவஞ் சிவன்
முத்தி மாநக ரடைந்துமுப் பானிரண் டறமும்
பத்தி கூர்ந்துநீ புரிந்தெமை வழிபடிற் பாறும்
புத்தி யீதென விடைகொடுத் தருளலும் பூவை. (௯)

என்ன மாதவஞ் செய்தன னியற்றமிழ் மதுரை
தன்னி னல்லறம் வளர்ப்பதற் கெனமனந் தளிர்த்தா
ளன்ன செய்குவ லென்றர னடியிணை யிறைஞ்சிப்
பொன்னின் மானமீப் பொலிந்தன ளத்தலம் புகுவாள். (௧௦)

வேறு.

விசையை யேசயை சண்டி மெல்லிய
லசைவின் மங்கலை யருகு சூழ்வரத்
திசைவி ளங்கநற் றீர்த்த கன்னிய
ரிசையுந் தேவமா முனிவ ரொய்தவே. (௧௧)

ண்ங்கொள் பூதலஞ் சிறப்பப் பல்சிவ
ணங்க டேவதுங் துபிக லித்திடக்
ணங்கொ ளன்பர்சென் றெதிர்ந்து கும்பிட
ஙைங்கொ டென்றிசை வழிக்கொண் டேகினள். (கஉ)

ங்கை சூழ்தரு காசி யேமுத
ங்கு மற்றுள தலங்க ளியாவையும்
பாங்கு மாசையாற் றொழுது பூம்பொழின்
ங்கு ரேய்பருப் பதம்வ ணங்கினள். (கங)

த்தி நல்குபொன் முகலி சூழ்ந்தகா
த்தி யானதென் கயிலை யீசனைப்
த்தி யாற்பணிந் தேத்திப் பாங்கர்சூழ்
மய்த்த லங்களும் விரைந்து போற்றினள். (கச)

ம்பை பாலிசூழ் காஞ்சி யானவே
ம்ப மேவுமே கம்பர் தாள்களை
ம்பை முன்புபோற் போற்றி யாங்கெழா
ம்பெய் வேணியா ரருள்பெற் றேகுவாள். (கரு)

பான்னி நாட்டுள தலங்கள் போற்றிச்சென்
றன்னை யாளுடை யிறைவி யாலவாய்
ன்னு மாசையால் வழிக்கொண் டேகியே
ன்னி நாட்டினிற் கடிது செல்கின்றாள். (கசு)

திர்த வழ்ந்தெழுங் கதம்ப கானத்தை
பதிர்ப ணிந்துசென் றேத்தி யன்பினன்
திர்த வந்தரு முத்தி மாநகர்
துனா யெய்தினள் மதுர வாய்மையாள். (கஎ)

வேறு.

ரலின் மென்மொழி விமானமின் றிழிந்துதன் பரிசனர் புடைசூழச்
ல தீர்த்தப்பொற் றாமரை யொடுசிவ தீர்த்தமுந் துளைந்தாடி
லை வஞ்செழுத் தோதிநீ றணிந்துதம் முதல்வனு ருறைகோயில்
லி னல்வலஞ் செய்திலிங் கத்தினைக் கண்டுகண் களிகூர்ந்தாள். ()

துதித்த ருச்சனை செய்துதாழ்ந் தெழுந்துதம் பரிசனர் சூழ்ந்தே
,வுதித்தெ ழுந்துமெய் யன்பினு லனுக்கைபெற் றுவந்துதா னுறை
காயிற், [illegible] சந்நிதி யீணுகியங் கயற்கணு யகிதன்னை
[illegible] பணிந்தனள் விசயையைப் பார்த்திது புகர்
ன்றாள். (கஅ)

ஆதி மூலமாம் பரையிவள் கலையிலா யிரத்தினி லொருகூறு
சோதி சேர்கயி லையிலிருந் தனனருட் சோதியு மிதுபோலு
நீதி மாதுநீ காணெனத் தர்ச்சனி சுட்டிநே ரிழைகாட்டக்
காத லான்மற்றைப் பாங்கியர்தாமுங்கண்டருச்சித்துக்களிகூர்ந்தார்

சோதி நாயகி மூவிரு சத்திக்கு மேலதாய்த் தொழினல்கு
மாதி நாயகி பரம்பரா நாயகி யாலவாய்ப் பதிமேவு
நீதி நாயகி யங்கயற் கண்ணியா நிமலநா யகிமுன்ன
ரோது மாதவஞ் செய்தன னறஞ்செயற் கெனவிச யையைநோக்கி.()

உறையு மில்லிடம் பொருட்டுணை யுயர்மகப் பெறுமவர்க் குவந்திந, விறைய வேபடிப் பவர்க்குரை நற்பொரு ணிகழ்த்துவிப் பவர்க்காத்தல், குறைவ றுஞ்சிவ நேசர்வாழ் திருமடங் குலவுசத் திரமுன்னூ, லறையும் வேற்றறம் புதுக்குதல் சிறையுண வனைவர்க்குந் தின்பண்டம். (உஉ)

சமைய மாறுமே வரைந்திடா துதவூமூண் சாற்றிய பேரைய
மமைவு ருதிறு மிறுதிசே ருயிரினை மீட்டலா டியாக்காத்தல்
சுமையு றும்மலர்க் காக்குள நீர்ப்பந்தர் தூய்மணங் கமழெண்ணெய்
கமைத ரும்விலங் குணவநா தப்பிணங் கதிதெரிந் தீடேற்றல். (உரு)

மருத்து வச்செயல் கணிகையர் போகநன் மணங்கொளுத் தமதான
மருத்தி கூர்தர வானிலங் திருமுறை கண்டிகை யணிநீறு
திருத்து பூசனை வத்திர தானமே செப்பிய கடன்றீர்த்தல்
பொருந்த முற்றிடு குருவுப தேசமெண் ணுன்கையும் புரிகென்றாள்.

அன்ன மேமுத லிடுதரு சட்டுவ மீந்தன ளதுவன்றி
மன்னு முத்தமத் தலைவன்முன் றருமிரு நாழிநென் மகிழ்ந்தீந்தாள்
பின்னு மற்றுளவறமெலாஞ்செய்கெனப்புகழ்ந்துபே ரருள்கூர்ந்தாள்
பன்ன ரும்புகழ் விசயையே முதலினர் பணித்தவா றவைசெய்வார்.()

அம்பி கைக்குமுன் னிருந்தறம் வளர்த்தரும் பவமொழித் தருள்பெற்றாள், செம்பொன் மாமழை நவமணி மலர்மழை பொழிந்தன செறிவானம், பம்பு துந்துபி வாத்திய முழக்கினர் சிவகணத் தவர்பல்லோ, ரும்பர் வானமே முதலமூ வுலகுமார்ப் பெழுந்தன வொன்றாகி.(உசு)

வால கில்லியர் முதலிய விருடியர் மகிழ்ந்துபூ ரணகும்பஞ்
சால்பி னேந்தினர் வேதமந் திரங்களாற் றனித்தனி துதிசெய்தா
ரேல வார்குழ லம்மையைக் கண்டுகண் டிறைஞ்சினர் கரங்கூப்பி
ஞால முய்யவெண் ணுன்கறம் வளர்ப்பது நாங்கள்செய் தவமென்றார்.

சுக-வது மகாமேருவிற்செண்டுங்கயலும்பொறித்ததிருவிளையாடல்

அந்தணரை யிகழ்ந்திடுமோர் வழுதி தாங்கு மவனியுள்ளோர் மழையின்றி வருந்தல் கண்டிங், கெந்துசெய்வே னெனக்கனவி லீசனெய்தி யிருஞ்செண்டான் மேருவைச்சென் றுணர்த்தி வேண்டு, மைந்துதனந் தறித்தெடுத்துன் கயலு மிட்டு வந்தவரை வாழ்வித்தி யாக மோங்கக், கந்தரவான் பொழியுமெனச் சொன்ன செய்து காலமழை பொழிதரப்பல் லூழி வாழ்ந்தான். (சுக)

சுஉ-வது சாட்சியழைத்த திருவிளையாடல்.

மல்குபொரு ளுடைவணிகன் கன்னி தன்னை மதுரைவளம் பதியிருக்கு மருக னூர்க்கே, நல்குமெனச் சொலித்துஞ்சக் கேட்குஞ் சுற்ற கரத்தா ரோலைவிட வந்தோன் பாம்பா, லொல்குமிடை யொருபோங்காற் புறம்ப யத்தி லொழிந்தெழுப்புங் கவுணியரான் மணநற் போத,வல்குமனம் பொருதமுன்கொண் மனைவி காண வழைத்தான்முச் சான்றீசன் கிணறு வன்னி. (சுஉ)

சுங-வது நாரைக்கருள்புரிந்த திருவிளையாடல்.

வதிவாவி வற்றமீ னற்றுப் போந்தோர் மாதவராச்சிரமத்தாவியுட்பு காமுன், புதுநீரா டுறுதவமா முனிவர்ச் சூழ்ந்து புணராமீனலியாது,நிற்பக் கண்டு,துஞானம் பிறந்துகொலை தவிர்ந்து போந்து சொக்கனரு ளுடையனெனக் கோயில் சூழும், விதிநாரை வந்தனையை விரும்பி வாவி மீனொழித்துச் சிவலோகங் கொடுத்தா னன்றே. (சுங)

சுச-வது வேதங்களைகண்ட திருவிளையாடல்.

பொற்புறுகண் ணுவன்முதல முனிவ ரெல்லாம் போந்துகிரேதாயுகத்தா திக்கண் கூடி, முற்புகலுங் கலியுகத்தி லிறந்த பான்மை மொழிபவர்யா ரென்றுவருந் துங்கால் விண்மேற், றற்பரமா மதுரைதனி லிருப்பல் வந்தாற் சாற்றுவலென் றருளக்கேட் டணைந்து போற்ற, நற்பரம குருவடிவாய்ச் சொக்கன் வந்து நான்மறையும் வியாகரணத் தொடுநவின் றான். (சுச)

ஈதுதிரு விளையாடற் சரிதை முற்று மியம்பினமுக் கிரனெனுமோர் தென்னன் சொக்க, நாதனையே நியமமாச் சேவை செய்வானண்ணுங்காற் கதம்பவனத் தினுநின் றேகித், தாதவிழ்பூம் புன்னைவனத் திலிங்கமாகிச் சங்கரனு வுடையெனும்பேர் தரித்துப் பாதி,

ாதொருபால் விளங்கவெதிர் காட்சி நல்கி ...ண்ணியதி சயலீலை புரி
மென்றும். (சுடு)

மதுரைத்தலவிசேடம்.

வேறு.

பொங்குபுகழ் மதுரேச னநாதிசதா சிவமென்னும் பொருட்கு
மலாய்த், தங்குதுவா தசவந்தப் பொருளாகி யப்பாலாய்ச் சுயந்தா
றகி, யெங்குநிறை சர்வத்ர பரிபூர ணப்பொருண்மா விராச வீச,
ங்கவன்மா றடிசான்றென் றெசுர்வேதம் வியாதநூ லடைவிற்
டும். (சுசு)

ந்தடைந்தோ ரியாரேனு மிருதமின்றி யமிருதமா வசித்துமுன்னைப்
ந்தமறு சீவன்முத்த ராயெடுத்த சனனத்திற் பரனே யாக
ந்துதவிப் பரநாத பரவிந்து சொக்கலிங்க மூர்த்தி வாழு
ந்தவிதி யான்மதுரை யமிர்தபுரி யெனவியம்பு மெசுரு வேதம். ()

வேறு.

ஆழி யாழி கடைந்திடுநா ளமிர்த மதுரை நகர்பரவ
பாழி யமிர்த புரியாய தென்னும் வேத மாலயங்கஞ்
ழுங் குலசே கரன்செய்நகர் சுத்தி பெறச்சொக் கன்றரித்த
ழி னிந்து வமுதைவீட வுரைக்கு மப்பே ருயர்சுருதி. (சுஅ)

இடபா சலத்திற் றுணைவரொடு மிருந்தர்ச் சுனன்கல் வியாணபுரத்
டல்வேல் வழுதி மகளாய சித்திராங் கனையை மணந்தடைவின்[றே
டல்சேர் வரம்பெற் றனன்கூடல் விமலன் றிருத்தா டொழுதென்
டநூல் புராணம் பாகவத மாபா ரதமு மியம்பியதால். (சுகு)

விண்ணு ரிமையோ ரந்தியத்தின் மிருத்து வரமே தினிப்பிறந்து
ண்ணுர் கிருது மாலிகைநன் னதிநீர் படிந்து தமிழ்மதுரைக்
ண்ணுர்சொக்கைத்தொழுதிறைஞ்சிக்கருதும்வரம்பெற்றிருந்தேகி
ண்ணு ரமுதுண் டிறவாமை யுற்று ரெனுநூற் பாகவதம். (எ0)

கேத மகற்றுந் தமிழ்மதுரைக் கிருது மாலை நதிதோய்ந்து
மோதி வருங்காற் றுறுதிசையின்மொய்த்துவாழ்பல்லுயிரனைத்தும்
ாதி மதிவே ணியனருளாற் பரமா முத்தி யெய்துமென
வாதி யைந்தாம் வேதமெனு மரும்பா ரதநூ லியம்பியதால். (எக)

வேறு.

புரிவளையந்தளிர்மலர்க்கையங்கயற்கட்பூவையைப்போற்றுலகிலுள்ள
பரிபுரத்தா ளாறுசத்தி முதற்சத்திக் கிறைவிபரா சத்திக் காதி
விரிபுகழ்சே ரிராசரா சேசுரிசிங் காசனமே லிறைவி யென்றே
திரிபுரசுந் தரிவித்தை யெனும்பொதுமந் திரநூலிற் செப்பு மன்றே.()

நிவந்தோளிருங் கதம்பவனம் பரமசிவன் மூலபரை நிலையாய்
வைகு, மூவந்துறைக்கிற் றலமதுரை பரமசிவ னும்பர்தொழுஞ் சொ
க்க நாதன், பவந்தநுதற் பராபரையங் கயற்கண்ணாள் வேறிலையென்
றெடுத்துப் பன்னுஞ், சவுந்தரிய லகரியினி லானந்த லகரியெனச் சா
ற்றுந் தொன்னூல். (எ௩)

வேறு.

சத்த கோடிமா மந்திரந் தனக்குநான் மறைக்கும்
வைத்த வாதியாங் காயத்ரி மந்திர வடிவா
முத்தி மாநகர் முதல்வியங் கயற்கணா ளென்றே
மித்தை தீர்விசு வாமித்ர கற்பநூல் விளம்பும். (எச)

ஆதி யாகிய வாலவாய்ப் பதிதொழ வணுகி
லோது மாமயிர் களைந்துநீர் படிந்துப வசித்துச்
சோதி யைத்தொழின் முத்தியெய் திடுமெனச் சொல்லும்
வேத மூலமே யாகிய சேதுமான் மியநூல். (எரு)

வேறு.

பாங்குறுபொற் றாமரைநீர்த் தீர்த்தத்தி லுத்தமந்தற் பரமாந் தீர்த்த
நீங்கரிய பல்கோடி யண்டங்கட் காதார நிலையே யாகித்
தேங்குபுகழ் மாமாயா வாரிநீ ராதலினாற் சேந்து தோன்றுந்
தாங்குநிறம் பேதிக்கில் விபரீத மெனச்சைவ புராணஞ் சாற்றும்.()

உலகுயிர்கண் மருள்விளையாட் டுழலாதின் னருளடைதற் கெ
ண்ணிச் சொக்க, னலகிலெண் ணெண் விளையாடல் புரிமதுரை ய
ன்பெருமை யரனே வல்ல, னிலகுசிவ தலங்களுக்கு மேலாகுங் கே
ட்கமுத்தி யெய்து மீது, பலகலைநூற் றுணிவென்றே யுருத்திரசங் கி
தையெடுத்துப் பகரா நிற்கும். (எஎ)

வேறு.

சுரர்குரு மனைவி வயின்மதிக் குதித்த தோன்றலாம் புதன்மகிழ்
ந் தெய்தி,விரைகமழ் கதம்ப வனத்துறை சொக்க லிங்கத்தை விதிமு
றை யருச்சித், துரகபூ டணன்ற னருளினாற் கிரகத் தொருவனா யோ
ங்கிய கல்விக், கரசனும் பதம்பெற் றிருந்தன னென்றே சங்கர சங்கி
தை யறையும். (எஅ)

வேறு.

சூதசங்கி தையிலுயரெக் கியவைப வகாண்டந்தொ குத்துச் சொ
ல்லு, மாதிசயி லையிலமலன் றாள்வணங்கி யரிகேட்பா னமர ரேறே,

யதவுடல் வருந்தாம லெத்தனத்தால் விசேட முத்தி யெய்துந் தான, மோதுகென வவனுரைகேட் டிறையுரைப்பான கதம்பவனத் துண்மை யுன்னி. (எகூ)

மாலவகேட் குதிலீலா விபூதிநகர் மதுரையின் மகிமை சொல்வா, மூலமதாம் விபூதியென்ப தழிவில்லா முத்தியெத் தனத்தான் மற்ற, லேலவருந் தவஞ்சனனுந் தரங்களின்முன் செய்தவர்க்கே யெய்து மானின், போலியமெய் யன்பருக்கே புகல்வததி குய்யமெனப் புகல்வ தானன். (அ0)

பூவுலகி லுயர்ந்தசிவ புண்ணியஞ்செய் தருந்தவங்கள் புரிந்து போத, மேவவரு சரியைகிரி யாயோக ஞானமுணர் விதியி னுற்றிப், பாவனையான் முப்பொருளு முணர்ந்தத்து விதமாகும் பரத்தைக கண்டாற், றவின்முத்தி தருந்தலங்கள் பலவவற்றி னெளிதினல்குந் தானங் கூறில். (அக)

அம்பலமா ரூர்காசி காளத்தி விருத்தகிரி யதிக்கி ராம *
நம்பர்புகழ் திருவெண்கா டையாறு வேதவன முயர்கோ கன்ன
கம்பர்திரு வானைக்காக் கேதாரங் கோவலூற் கும்ப கோணங்
கம்பமுறு மிடைமருதூ வீமேசஞ் சோமனு தமிரா மீசம். (அஉ)

இத்தலங்க டனிற்பஞ்சாக் கரம்பிரண வத்தோடு மியையக் கூட்டிப், பத்தியினுற் பன்னீரா யிரஞ்செபித்துத் தரிசிக்குங் காலம் பார்த்து, நித்தியமுஞ் சேவைசெய்து நீங்காமல் வசிக்கிலெய்தும் விசேட முத்தி, சத்தியமித் தொகுத்ததலங் களின்மேலாஞ் சீவன்முத்தித் தலமொன் றுண்டால். (அரு)

தன்னுடலம் வருந்தாது குளியாது செபியாது தவஞ்செய் யாது,முன்னுதற்குக் காலம்பார்த் தந்தந்தக் காலத்தின் முறைதப் பாது, பன்னுமதிச் சடைச்சொக்கைப் பணியாதங் கயத்தனத்தாற் படர்ந்து சென்று, மின்னியவத் தலத்தெல்லை யறியாது மிதித்தாலும் விசேட முத்தி. (அச)

முன்னொருமா பாதகனந் தணன்றன்னைப் பயந்தமதி முல்லை மாதர்,தன்னைமன மருட்டியணைந் தொருவாது தாதையையும் வதைத்தோ ராண்டு, மன்னுலகி லவளோடுந் திரிந்தனனிப் படிதிரிந்து ம

* அதிக்கிராமம்-வைத்தீசுரன்கோயில்.

ருவு நாளிற், பின்னுறுப் பிரமகத்தி யிருப்புலக்கை யெடுத்தடர்ந்து பிரமை செய்தே. (அ௫)

அதிபயமுற் றதுகண்டே யுழலுங்கா லாற்றுமுற்புண் ணியுத்தி னாலே, மதுரைநக ரெல்லையடைந் தனனடரும் பிரமகத்தி வருதல் காணு, னிதுபுதுமை யதிசயமித் தலத்தில்வசித் துடல்விடுவோ மெ ன்னப் போந்து, முதிர றிவு பெற்றிருந்தான் முப்போதுந் தொழுதி சொக்க மூர்த்தி தன்னை. (அ௬)

கோலமார் பதியிதெனக் குறித்த றியான் முன்னொருவர் கூறக்கேளா ... யெல்லையயத் தனத்தினனு கலுமாபா தகம்போ யாதி ... கியதலத்தில் வந்தவுடன் முன்செய்வினைப் பவமு நீங்கிச் ... தவர்பரவு சீவன்முத்த ஞானனுட் டெளிவு பெற்றான். (அ௭)

...தப்படநா மாடுறுநின் மாலியதீர்த் தம்படிந்தஞ் செழுத்தை ..., பிதக்கணத்தி னுயர்ந்ததங்கப் பிதக்கணமென் றறிந்துபிதக் க...ஞ் செய்து, முதற்பொருடேர் மெய்யன்பர் பாததீர்த்த மும்ப ருகி முன்னி வைகித், திதப்படுமுத் தியையடைந்தா னமதருளா லமு தலிங்கஞ் சேவை செய்து. (அஅ)

இன்னுமுள வயத்தனத்தான் முத்திதருந் தலமெனவே றெணலி தன்றிப், பின்னுமொரு தலமுளவோ நிச்சயமித் தலமென்றே பின்னு ங் கூறுங், தன்னிகரித் தலத்தினின்மா தானமருந் தவம்யாகந் தருமு மோமம், பன்னுசெபம் பூசையற்பஞ் செய்திடிலொன் றனந்தமிவை பகர்ந்தே முண்மை. (அ௯)

உவ்வேளை யவ்வேளை யுவந்துதொழுங் காலமென வூன்றி யெ ண்ணு, தெவ்வேளை யிற்றொழினு முத்திதருஞ் சத்தியமீ தென்று ன ந்நா, ளவ்வேளைக் காய்ந்தபிரான் புகல்வதுகேட் டகமகிழ்வா லவன் ருள் போற்றிச், செவ்வேளைத் தன்மருக னெனவுடையான் சிந்தித் தான் செழுந்தென் கூடல். (௯0)

ஈதன்றி நித்தியவி பூதிநக ரென்றியம்பு மியம்புங் கூடல் யாதென்று வினவுதிரேற் றேன்றுவவெல்லாமொடுங்குமக்காலத்துந் தீதின்றி யழிவில்லா திருத்தலினுற் சிவனுமைக்குப் புகன்ற தாக நாதனரு ணந்தியரிக் குணர்த்துவன்கா ரணமதற்கு நயந்து பின்னும்.

அண்டபுரு டற்குமற்றைத் தலங்களவ யவம்பிரம ரந்திரத்தி ற், றுண்டமதி வேணியுறை பெருங்கயிலை யதற்குமேற் றுவாத சா

தத், தெண்டகவே யழிவில்லா நித்யவி[illegible]மெப் போதுமோ
ங்குந்,தண்டமிழ்த்தென் மதுரையென்[illegible]சுருத சங்கிதைசத்திய
ாய்ச் சாற்றும். (கூ௨)

எத்தலத்தி னும்விசிட்ட மதுரையென்றுன் மாதவத்தோ ரியம்ப
் கேளா,வித்தகனு ராடபுறத் தொட்டிகின்மா லியதீர்த்தம் வியன்பெ
ற் ஞேங்கு, மத்திலுறை மிருத்திகைவெம் பிணியெல்லா மகற்றுமெ
ன்று யவற்றைத் தேர்ந்து, முத்தமிழ்மா தவவிரித்து மொழிகென்று
ரவன்றெருத்து மொழிவ தானுன். (கூ௩)

புறத்தொட்டிகின்மாலியதீர்த்தமகற்றுநரக
சேடானுபவவியாதிகள்.

வேறு.

அங்கிநீர் விட்ட வித்தோர் சொலித்திடா வழற்குண் டத்திற்
பொங்கிய வோமஞ் செய்தோர் நடுவிடை விட்ட புல்லர்
தங்கிய வங்கி மாந்த நோயினர் தனியன் பில்லாப்
பங்கம்வந் துறவே பந்தி வரைந்துணும் பதகப் பாவர். (கூச)

வாயுவோ டங்கி மாந்த மரோசிகந் தலைநோய் வாட்டு
நோயினர் நறிய வன்ன நிறைகனி காய்மற் றுள்ள
வேயுற வுடனுண் போருக் குதவாதுள் ளிருந்து துய்த்தோ
ரோயுறு சந்து வாத மனப்பீழை யுறுநோ யாளர். (கூரு)

அருந்தித்தா முன்பு பின்பு பெரியோரை யருத்து வித்தோர்
பரிந்தநெஞ் சுளைவி ஞேடு படுமெழு நாயி றென்னும்
வருந்துறு நோயர் வந்த விருந்திற்கு வழங்கா துண்டோ
ருருந்தெழுங் கபோல ரோகங் கன்னுேசி யுறுநோ யாளர். (கூசா)

கிளைஞர்வந் திடிலொ ளித்தோர் கிளர்தரித் திரரோ கத்தோ
டுளைவுறு நயன ரோக ருண்டல்கண் டசுகை யுற்றோ
ரளைசுர சாத நோயோ டிரோசிகர் களவா லன்னம்
வளமுறத் துய்த்தோ ரத்தி மயமாக்கும் வற்ற ஞேயர். (கூஎ)

ஒருவனைத் தள்ளி யன்னு னுண்பதற் குரித்தா மன்ன
மருவருப் பின்றித் தாமே வலியினு லயின்றோ ரோதம்
பருவரு முடலில் வீக்கம் படுத்துகா மாலை நோயர்
மருவுமன் னியர்ப தார்த்த மடமையால் வலிதிற் றுய்ந்தோர். (கூஅ)

தெளிவிசு வாச பாதர் நீவிர சத்தி நோய
ரளிதக வுறும்பி ரேத சிராத்தத்தி லயின்றோ ரன்ன
மெளிவரும் வஞ்ச நெஞ்சோ டநாசார மியைந்து செய்தோ
ருளையும்வெப் புறுத்துங் கன்னக் கிருமியென் றுரைக்கு நோயர். ( )

அரனடி யார்க்கென் றுக்கு மன்னத்தைக் களவாற் றுய்த்தோர்
புரையிவை யென்றெ ணாது புசியாது புசித்தோர் வெம்மைப்
பரமுறு கண்ட நோயர் படுமலங் கழித்தவ் வெச்சி
றிரமுறக் கழுவா முன்னூண் செலுத்தினோர் கிராணி நோயர்.(கOO)

இ[illegible]பால் கரவிற் றுய்த்தோ ரிடையுநீ ரிழியு நோயர்
[illegible]மதுப் புசித்தோர் சொத்தைப் பற்குத்து நோயர் வேசை
[illegible]தையர்ப் புணர்ந்தோ ராக்கை வருந்துறு கிரந்தி நோயர்
[illegible]ாப் புசிக்குங் கல்லைக் கிலகரந் தெடுத்த புல்லர். (கOக)

[illegible]வ யறுப்புண் டாரு விலிங்கபின் னமதா நோயர்
[illegible]ற் றிடுமூ னுண்டோ ரொருவர்நின் தனையைச் சொற்றோர்
தாங்கருங் கலக்கங் கொள்ள யாரையுந் தனிபீ டித்தோர்
வாங்குதற் கரிதாம் பித்த மலிதரு கயரோ கத்தர். (கOஉ)

அலவன்கா லொடித்தூன் சால வருந்தினோ ரழுகிக் கைகா
ணிலைகுறைந் திடவே வாட்டு நீங்கருந் தொழுநோ யோடு
புலவுநீ ரொழுகி மாறுப் பொங்குவெண் குட்ட நோயர்
பலவுமென் பகர்வ தன்னோர் படுந்துய ரெவரே சொல்வார். (கOங)

வே று.

உவவினிற் பிதிர்நா ளினின்மனச் செருக்கா லொண்டொடி மாதரைத் தோய்ந்தோ,ரவமுறு விழிகண் குருடொடு மாவி யயர்வுறு மண்டவா தத்தர், கவலொடு கிரணத் தன்னிய மடவார்ப் புணர்ந்தவர் கபக்கய ரோகர், தவறறு மயலார் வாழ்ந்திடப் பொறுதோர் சன்னிபா தக்கய ரோகர். (கOச)

பூத்தவா ருச மாதரைப் புணர்ந்தோர் புரைபடு பவுத்திர நோயர், கார்த்தொரு வரையா யத்தடித் தவர்கைக் கிரந்திகை வாதரோ கத்தர்,தீர்த்தனு லயத்திற் காமத்தை விளைத்தோர் செறிமுட ரோமவெம் பிணியர், பார்த்திடார் நீதி திவாவினிற் புணர்ந்தோர் பற்பல வாதநோ யாளர். (கOரு)

இழுகிய வெண்ணெய்த் தலையொ[illegible]ன்புறின் மலசலங் கழிக்கின், விழுகுறு முடைசேர் நரகினி[illegible] வெள்ளொளி விளங்குபல் விளக்கி, னெழுகுபூப் பெண[illegible] ளொருமூன் றுண்டென தன்னவை புரிவோ,ரழுகுமூ லத்தோ டழிவுறும் வெகுநீரிழி வெனுங் கன்மநோ யாளர். (கOசு)

மனைவியைத் தொடாது வரைந்துளோர் கழுத்தி லெழுந்தவன் கழலைநோ யாள, ரனைவருந் தொழுமெய்ஞ் ஞானியை நிந்தை யறைந்துளோர் பெரும்பித்த ரோகர், வினைவழி வரும்பா ரியர்க்குளாங் கொருத்தி யாசையான் மற்றையர் வெறுத்தோர், நனைமலர்க் குழலார்க் காகொணு வலிநோ யொடுமுடை நாற்றநோ யுடலர். (கOஎ)

தன்மனை யாளை முகரதஞ் செய்வித் தவர்தாமு மத்தொழில் செய்தோர், கன்மமார் வழுக்கற் கொடித்தலை யாக்கிக் காட்டும்புண் சிரோகுட்ட ரோகர்,புன்மைசேர் முடையிந் தியம்புசிப் பித்தோர் புகல்குறி சோர்தரு மலிநோய், பன்மலர்க் குழலார் வெறுத்திடுந் தாதுநட்டநோய் பாண்டுரோ கத்தர். (கOஅ)

கற்புடை யயலார் மனைவியைப் பார்த்தோர் கண்ணிற்றெண்ணூற்றறு நோயர்,முற்படு நல்ல பாம்பினை வதைத்தோர் மொய்விடப் பாகவெம் பிணிய, ரற்பொடுந் தன்னை டுதித்தவட் புணர்ந்தோரடர்வெகு நீரிழி வாளர், வற்பொடு பயந்த வன்னையைத் தோய்ந்தோர் மதுப்பிர மேகரோ கத்தர். (கOகூ)

மருகியைச் சிறிய தாயரைத் தாமுன் வணங்குதற் குரியநா ரியரைச், சருவியே யணைந்தோ ரோய்ந்திட விசிக்குஞ் சந்துவா தக்கொடும் பிணியர், குருவெனுர் புணர்ந்தோர் தொழுகுல மாதைக் கோரமா கிரந்திநோ யாளர், வெருவிடா தவையி லபானவா யுவிட்டோர் மிகுசூலைக் குச்சவெந் நோயர். (ககO)

கன்னியை யயற்பன் னியைவித வையைநாற் கால்விலங் கினைத்தனி புணர்ந்தோர், துன்னியே சுறுக்கொண் டுற்றுநீர்ச் செறுப்பு நோயர்சொற் கன்னியர் கலந்தோ, ரன்னியர் மனையை நாடினரு யிர்கொன் றருந்தினர் செய்ந்நன் றி கொன்றோர், மன்னுநண் பினர்க்குக் கபடமே செய்தோர் வருத்துறுங் கருங்குட்ட ரோகர். (கக௧

பரிவொடுந் தனைச்சே வித்தவன் மனையைப் பரிசித்தோ ரங்கைவா தத்தர், குருமனை தொட்டோர் கருவிடை யழித்தோர் கொடிய

தா மகோதர நோயர், மருவியே தம்மைச் சேவகங் கொண்டோன் மனைவியைத் தேவெனுர் மணந்தோர், கருகியே யாவி பரதபித் தோயக் காட்டும்வா தாதிக்க ரோகர். (ககஉ)

விரதமா மாதர் விரதத்தை யழித்தோர் வேசைபாற் றூதுசென் றெவர்க்குஞ், சரதமாஞ் சந்து பொருத்திநாள் கழித்தோர் தளர்ந்தநீ ரிழிபிர மேகர், சுரதவே சையரோ டளாவியே சதுரங் காதிய சூதவை பொருதோர், புரைதவா வற்ப கேசத்த ரவலம் புரிந்திடும் புழுவெட்டு நோயர். (ககங)

கலந்துவே றிருவர் புணர்ந்திடு மின்பக் கலவியைப் பார்த்துடன்றுநர்ந்தோர், நலிந்துட னொழுகு நீர்ப்பசுப ரோக முதலிய நயனவெங் நோயர்,வலிந்துவே சையரைப் பொருள்கொடா தணைந்தோர் ராலித் ரொலித்திடும் வண்ணுர், பலந்தரும் கூலி யளித்திடா ரரையாப் பெரிகுட்டங் கிரந்திபன் னோயர். (ககச)

ஆசையாற் கோயிற் கணிகையர்ப் புல்லி யன்னரை வரைந்துதம் மில்லையைத், தீசர்சங் கிதிரு னியஞ்செய்தோ ரதனுக் கிடைப்படு மடக்கொடி மடவார், காசுசேர் கயரோ கம்பெரு வியாதி யொடுகடி குட்டநோய் பிரமை, சீசியென் றெவரும் பழித்திட வலக்கண் செயுமுட ரோமரோ கத்தர். (ககரு)

பொருடுகில் கவர்ந்து கலவிவஞ் சித்தோர் புழுச்செறி யல்குற் புற்றுறுநோய்,சுருளவே வலிக்கும் வயிற்றுறு சூலை தொடருமென் புருக்கிவெங் நோய, ரிருடருங் கைம்மை யாகியும் பலரோ டிச்சையாய்ப் புணர்ந்திடு மாதர்,வெருளுறச் செய்யு மழுகுபுண் குட்ட முதலிய மேம்படு நோயர். (ககசு)

தூய்மையொன் றின்றி யெச்சிலங் கையினுற் றொடாதவைத் தொட்டுட னெடுத்தோ, ரேமுற வாவி மயங்கிடச் செறுக்கு மெக்கிய வயிற்றெட்ட னோயர், காமுற வொண்ணுப் புலைச்சியைச் சேர்ந்தோர் கருதினோ ரன்னரோ டயின்றோர், மாமைதி ருடலம் வாட்டியே வருத்து மெரிகுன்ம வாயுநோ யாளர். (ககஎ)

உப்புவெண் ணீறு வெண்கலந் துகில்காற் பரிசமுங் கிவைகரந் தெடுத்தோர், மெய்ப்புறப் படித்தோர்த் தூடித்தோர் கடினம் விண்பினோர் வெண்குட்ட ரோகர், தப்பறு பட்டுத் துகில்வெள்ளி கரந்தோர் சதித்திடும் பலகுட்ட நோயர்,செப்பருங் கொடுங்கோ லூனைத்தவர் நாறுந் சீவடி நாசிவெம் பிணியர். (ககஅ)

அயலவர் மகவைப் பொருமையிற் காய்ந்தோ ரன்னியர் பொருணவ மணிகண், மயலொடு கரந்து வவ்வினோர் தூய மகப்பெருமலட்டுவெந் நோய, ருயர்திரு முறைக ளெழுதவே வாங்கி யுதவிலர் களவினு லெடுத்தோர், செயலறு பிறவிக் குருடுகை வாதந் தியங்குவாய் வாதரோ கத்தர். (கக௯)

ஆவினெய் கவர்ந்தோ ரெண்ணெய்விற் றுண்டோ ரரும்பொருட் கூலியேற் றில்லின், மேவிடங் கொடுத்தோ ரூர்ப்பொருள் கவர்ந்தோர் மெலிகண்ட மாலைரோ கத்த, ரோவமில் வங்கங் கரந்தபரித்தோ ரீனமேற் சுவாசவெம் பிணியர், நோவுறுங் கொடுங்கோருரைத்தவர் குன்ம வாயுநோய் றுவறந்த ரோகர். (க௨0)

எண்ணெய்தேய்த் திருநீ ராடினர்த் தடுத்தோ ரிரசவர்க் கங்கந் துண்டோர், நண்ணிய குற்ற மின்மையை யறிந்தும் யாரையு நகைந்துபீ டித்தோ, ருண்ணிறை யகற்று மையிரு சிரநோ யொழிவிலா வொருதலை நோயர், தண்ணறுங் கனிகாய் களவினிற் கவர்ந்தோர் சலங்கொள்விப் புருதிவெம் பிணியர். (க௨க)

சோரர்பொய்ச் சோரர்க் குபாயங்கள் பகர்ந்தோர் சொன்னவன் னவர்க்கிடங் கொடுத்தோர், கோரமே விளைக்கும் பாதரோ கத்தர் கூறரு நேத்திர ரோக, ராருமக் கள்வர் நட்பினர்க் கோறல் விலக்குன ரழிவழக் குரைத்தோர்,சேருறுங் குற்ற மிலருயிர் செகுத்தோர் தீர்வில்கால் கரங்குறை நோயர். (க௨௨)

ஈதலை விலக்கும் பாவிய ரொருகண் ணிழந்தவர் தரித்திர ரோக, ராதரா யடைந்தோர்க் காசைபே சிக்கை விட்டவ ரடைக்கலப் பொருளைப், பேதுறக் கவர்ந்தோ ரிராசவெங் கயநோய் பீடிக்கும் வீக்கவெம் பிணிய, ரோதுமுச் சிட்ட வரைவிலார் விரண வாதருண் முடக்குவா தத்தர். (க௨௩)

அமைச்சரா யரசு கொன்றவர் செருக்கி னநீதியாற் புவிக்கிடர் விளைத்தோ, ரிமைப்பெ ழு தேனுந் தணிந்திடல் செய்யா திடர்செய்யுஞ் செங்குட்ட ரோகர்,தமைப்பொரு ளென்றே சேவகங் கொள்ளுந் தலைவனை நிந்தனை பகர்ந்தோர், குமைத்திடும் வலிய முயலகன் வலிமுன் கூறும்வாய்க் கிரந்திவெந் நோயர். (க௨௪)

அன்னிய ஞெருவ னியல்பல செய்யி னரசலா தவனிலிங் கத்தைத், தன்னதிச் சையிலீர்ந் தவரறுப் புண்பர் தணிவினே யிலிங்க

வுட் டினத்தர், மன்னுபோர்க் களத்தி லாண்டவன் றஞ்ச மடிந்தி டார் புறகிட்ட வீரர், தன்னிய தாகங் குறைப்பிணி திடுக்கம் பிள வைதுற் றிளைப்புவெங் நோயர். (கஉரு)

பண்பொடு சேவிப் பவர்பொரு டமைநேர் பகைகடி வீரர்பொ ன் கவர்ந்தோர், கண்படு தொண்டை யடைப்புநோய் கடியு மிராச வெங் கயக்கடும் பிணியர், புண்பட்டக் கவிரா வலவனா யவையிற் பெரு ருமையின் வாதித்து முறித்தோ,ரெண்படு நடுக்கு வாதநோ யங்க சே ட்டைநோ யிடர்ப்படு நோயர். (கஉசு)

ஒருவரைப் பாடி யவர்செவிப் புகுத்துங் கவிதைமற் றொருவர் மேல விரும்பித், திருவிலார் சாத்துக் கவியெனப் பிணைத்தோர் தெ ற்றிவா மூங்கைநோ கத்தர், வருபெரும் புலவர் கவிதைகேட் டவர்க் கு வரிசைநல் காதமோட் டுழுத்தர், வெருவுயிர் நீக்கு மவமிருத் தல று சன்னியோ டின்னல்வெம் பிணியர். (கஉஎ)

நயிட்டிக விரத மழிந்துளோர் சுகசன் னிப்பிணி நலிவிய நோ ய, ரயிர்ப்பில்சந் நியாசக் கோபியர் மூல வெகுளியோ டருங்கய ரோகர், செயிர்ப்பறு விரத்த மழிந்தயற் பன்னி விதவைநீக் கணிகை யர்ப் புணர்ந்தோர், வியப்பொடு புசிப்பை விரும்பினு ரரத்த மூல நீர்ச் செறுப்புவெங் கயத்தர். (கஉஅ)

துறவியாய் மண்பெண் பொருண்மனம் வைத்தோர் சூதுகொ ள் குத்திரம் விளைத்தோ, ரறவணு லயங்கள் பரித்தொரு ரிருப்போ ரரசர்ச்சேர்ந் தோர்குறை நோயர், மறமகல் குருவாக் கிகழ்ந்தவர் முகரோக கத்தர்மா நெறியுடை யோரை, முறைவமு வவமா னம்பல செய்தோர் முடிவில்கால் வாதரோ கத்தர். (கஉகூ)

ஆரருட் குருவைக் கடிந்துநீ யென்றோ ரந்தண ரோடுதர்க் கி த்தோர், நீரறு வனத்திற் பிரமராக் கதையாய் நிற்பது மன்றிவாய்ப் பிணியர், சீர்பெறு பண்டைத் தேசிகர்ப் பகைத்து மற்றொரு தேசி கர்ச் சேர்ந்தோர், பூரிய ராவ தன்றியும் வெம்மை பொங்குதா பற் சுர நோயர். (கஙo)

எங்கடே சிகனே பெரியனுங் குரவ னிழிஞனென் றொருவர்த்த ர்க் கித்தோர், பங்கமா முடக்கு வாதத்தர் பார்த்தோர் கேட்டவர் குருடொடு செவிட, ரங்குரு நிலைதீர்ந் தாசனத் திருந்தோர் துகில் போர்த்தா லயம்வலஞ் செய்தோர், முங்குதீர்த் தத்தின் மண்டிணுடு குளித்தோர் மூங்கைநோய் தரித்திர ரோகர். (கஙக)

தாதைதா யாசா னிவரொடும் பகைத்தோர் சர்வாங்க வாயு ரா கத்தர், வேதியர் பொருண்மேல் வேசைமே லுள்ளம் வைத்தவ சலப்பிர மேக, ரேதிலார் மனம்பீ டிக்கவே செய்தோ ரின்னற்கி ;ச்சுர ரோக, ராதியான் மடத்திற் றம்பல முமிழ்ந்தோ ரருந்தொ ன்டை யடைப்புநோ யாளர். (கரு௨)

அந்தணர்க் கொன்றோர் பிறருயிர் செகுத்தே தன்னுடல் பேணி ேனா ராசான், மைந்துறு கற்பின் பன்னிபா லுள்ளம் வைத்தவர் வா தவெங் கயத்தர், முந்திய வுபதே சமுங்குரு வாக்கு மறுத்தவர் முய ல்பணி விடையிற், சிந்தியார் தவசிப் பிள்ளையாய் வஞ்சஞ் செய்தவ : திமிர்வாத ரோகர். (கருக)

புராணநூ லோதும் புனிதனைச் சிவதே சிகனென்றோ ரானை னப் புகன்றோர், விராவிய புழுவான் மிகைசெயும் வாய்ப்புண் மிகு ந்தவாய்க் கிரந்திவெம் பிணியர், தராதலம் பரவு முண்மைநூ லுணர் த்தன் பின்றியோ துநர்மதுத் தசைகள், பராவியே துய்த்தோர் சிர கசே டத்தாம் பண்புறு மூங்கைநோ யாளர். (கருச)

ஈசனே முதலாந் தேவகா ரியவிக் கினஞ்செய்தோ ரிவர்பொ ருள் கவர்ந்தோ, ராசினுன் மறையோர்க் கிடர்செய்தோ ருழலை யா க்குநோ யுட்சுர நோயர், பூசுரீ றணியு மீசனு பரணங் கவர்ந்துபொ ய்க் குரம்பையிற் பூண்டோர், தேசியன் னவர்நோ யாரெடுத் துரைப் பார் செறிபுழுக் குட்டரோ கத்தர். (கருரு)

துலங்குமா லவட்டம் விசிறிகள் கவர்ந்தோ ருட்டண துக்கவெ ம் பிணியர்,பலங்கெழு மீசன் றிருப்பணி பூசைபடித்தரங் குறைத் ததி நரகர்,கலங்கவே செய்யு மலிப்பிணி வருத்தங் காட்டுறு மருங்கய ரோகர்,நிலங்கெழு மீசன் சமயத்தை நிந்தை நிகழ்த்தினோர் சலவாத நோயர். (கருகு)

இணையிலாச் சிவனுக் கிணைசொலி யிறக்குந் தேவரைப் பரம்பொ ருளென்றோர்,புணையிலாத்துன்பக் கடலிடை யழுத்தும் புழுச்செறி வாய்ப்புற்று நோயர்,மணமுறக் கொடுப்போர் தங்களை யிகழ்ந்தோ ர் புழுக்குடை பல்லுநோய் மலிநர்,பணவிடைத் துயின்றோர்ப் பழி த்துநிந் தித்தோ ருதரவங் கிப்படிழ் பிணியர். (கருள)

சிவனிடத் துதிக்கு மூவரை நிந்தை செப்பினோர் வியாதிசேர் வ யிற்றர்,நவமுறு கோயிற் சுற்றினிற் கணிகை நாரிய ரொடுகளிப் புற்

ற்றோர், தவறுற மலச லாதிகள் கழித்தோர் தலைமயிர் கோதியே முடி ந்தோர், பவமெனு தெச்சி லுமிழ்ந்துளோர் பிதற்றும் பழிபடும் பெ ரும்பித்த ரோகர். (கநூஅ)

கோயிலுட் டுயின்றோர் தலையிடி மண்டை நோயினர் குளிர்தீர் த்தத் துறையின், வாயினீர் மூக்குச் சிந்தினோ ரிரத்த பீனசர் நந்தன வனத்தி, லேயுற வெச்சி லுமிழ்ந்தவர் தாலு வாதத்த ரிருந்தவ ரறத்த, ராயுநற் றேவ ரிவருக்கன் பில்லோ ரற்புத வாயுவாய்க் கோணர். ()

பிதிர்தினஞ் சிராத்தஞ் செய்திடார் மிகவும் பீடிக்கு மக்கினி மாந்த முதிர்தரு மிரண வாதநோய் வந்தி நோயினர் முனிந்துபாற் பசுவை யதிர்தரு துக்கஞ் செய்தவர் நாசி கோணும்வா தத்தரார்த் துழுதோர் கதிபெரும் பாரஞ்சுமத்தினோர்சுறுநீர்ச்செறுப்பொடுகெடியும்வாதத்தர்.

களவினு லன்னம் வேதியர் செம்பொன் கவர்ந்தவர் கிரணகா லத்தி,லொளிவளை மாதர்ப் புணர்ந்தவ ரநாசா ரஞ்செய்தோ ருயர்ப சு வதைத்தோர், விளிவுறப் பொசியு மூலரோ கத்தர் விழுப்பசு வழித ப்பி முறித்தோர், தெளிவின்மா பாதப் பேச்சினைக் கேட்டோர் செ விப்புற்றுச் செவிடுபன் னேயர். (கசக)

அந்தணு ராசா னருந்தவர் பெரியோ ரறிஞர்தற் சூழ்ந்துட னட ந்து,வந்திட வேறி வாகன மிவர்ந்தோர் வருத்துமா வாதரோ கத்தர், நிந்தியா வொருவன் றலைமிதித் துதைத்தோர் தாகத்தி னீருத வாதோ ர், சிந்தியார் நிசிகா லத்தினீர் படிந்தோர் சிரத்துநோய் கபாலநோ யாளர். (கசஉ)

புண்ணிலை யறியார் சத்திர மிட்டோர் பூதநோய்த் தூலகா யத் து, ரெண்ணெய்தேய்ப் பவரைப் பிரித்தவர் கபால ரோகத்தோ டி டிதலை நோயர், நண்ணுகுஞ் சரங்கொன் றவர்திமிர்ப் புழுவா னலி ந்திடு முதரவெம் பிணிய, ருண்ணுதி யெனத்தீ விடத்தைமற் றொரு வர்க் கூட்டினோ ரக்கினி மாந்தர். (கசங)

கண்ணியால் வலையா லுயிர்பல செகுத்தோர் கனிமரச் சோலை யை யழித்தோ, ருண்ணுநீர்க் குளங்கா லணையிவை முறித்தோர் கு றைப்பெரு வியாதிரோ யுடலர்,வண்ணநீர்க் கிணறு விகடட மழித் தோர் வருத்துநீர்ப் பாடுநோ யாள, ரெண்ணடி யற்றோர் சொம்பரி ந் தெடுத்தோ ரெழின்முகம் வீங்குவெங் நோயர். (கசச)

புண்ணினிற் கோலிட் டலைத்தவர் கைக்குத் தாகநல் லோர்க ளைப் புடைத்தோர், கண்ணுபோ ரின்றிக் கபடமாய்க் காயப் படுத் தினோர் பிளவைநோ யாளர், வண்ணவான் மாடு மாந்தரோ முதல வு றுப்பொடிந் திடவலிந் தடித்தோ, ரெண்ணரும் வருத்தஞ் செய்துட் ன் முறித்தே யெழுமுறி வாதரோ கத்தர். (௧௪௫)

களவிலா வடியா ரைக்கள வுறுத்துங் கடியர்நோ யழுகுபுண் கு ட்ட, ருளேபெல மிலரைச் சுமக்கொணுப் பாரஞ் சுமத்தினோ ரூற்று நீர்ச் செறுப்பர், வளமில்பொய்ச் சான்று பொய்வழக் குரைத்தோர் வருத்தும்வாய்க் கிரந்திபுண் ணுேய,ரளியர்பொன் மறையோர் நிதை பிடித் திர்த்தோ ரடைப்புநீர்க் கடுப்புக்கல் லெரிப்பர். (௧௪௬)

செட்டுநீ தியைநீத் தறக்கொடுஞ் செட்டுச் செய்தவர் நிறைத்து குறைத்தோர், வட்டியை யறவாங் குநர்மட மையிற்றும் வாங்கிய தனிசுநல் காதோ, ருட்டெறு மிரண வாதநோய் குறைநோ யினர் தனி ரகசிய மொற்றித், தட்டறக் கேட்டோர் வெளிசெய்தோர் வரு த்தந் தணிவிலா நெஞ்சுளை நோயர். (௧௪௭)

பிணியராய் வந்த பெரியரை நீத்தோர் பிறங்குகண் கால்கர நோ யர், தணிவறு நயன பாடையர விறையாற் சன்னைசெய் தொருவருக் கொருவர், துணிவுறு சண்டை மூட்டினோர் வாயிற் றுர்க்கந்த நோ யரு ருணிக, ளணிகெழு மன்ன சாலைநீர்ப் பந்த ரழித்தவர் நீர்க்கோ வை நோயர். (௧௪௮)

எருதுவந் தேறி வழிநடத் தினவ ரிடர்செயு மரைப்புண்ணி னுயர், மருவரு மனத்து வஞ்சகர் வாக்கு மாறினோர் பெரியர்சொ ன் மறுத்தோ,ரருளுரை கேட்கிற் பராமுகஞ் செய்தோ ரழுகுபுண் குட்டரோ கத்த, ருரைசெயி லநேக நரகசே டத்தா முறுபிணி சுருக் கிநா முரைத்தேம். (௧௪௯)

தோற்றிய கபத்தால் வாதபித் தத்தாற் றெட்டுநா லாயிரத் தொடுநா, னூற்றுநாற் பாறு விரண்டுநோய் பவநோய் நுவலுதற் கருமினை நோயர், மாற்றரும் பில்லி சூனிய நாள்கோண் மற்றெவற் றினும்பய முற்றே, ரூற்றிருந் தொழுகு நறைமலர்க் கடம்ப வனத் தில்வந் துண்மையா யெண்ணி. (௧௫0)

தடமலர்ப் பொற்று மரைப்புனன் மூழ்கித் தாவினீ றுருத்திர வக்க, மடைவினி லணிந்தஞ் செழுத்தையுச் சரித்தே யருட்டிரு

வணந்தலிற் றெழுது, மடவர லுமையங் கயற்கணு யகிலைச் சொக்க லிங் கத்தைமுன் வழுத்தித், திட்டமுற விவர்நின் மாலிய தீர்த்த மிருத் திகை தினமுமுட் கொண்டு. (௧௫௧)

மண்டல மொன்றே னும்மதிற் பாக மேனுநன் னியமமா வழி பட்டு, உண்டென மனத்தி லெண்ணிலம் மருந்தா லுறுபிணி பாதக மொழியு, மண்டர்நா யகன்ற னருளினு லெடுத்த சனனத்தின் முத்தி யு மடைவர், தண்டலி றவத்தீர் கேண்மின்முக் காலுஞ் சத்தியம் புக ன்றன முண்மை. (௧௫௨)

வேறு.

என்ன மாதவத் தமிழ்முனி யியம்புதல் கேளா
ரன்ன மாதவப் பேற்றினன் மொழிதரக் கேட்டே
யின்ன லாலெமக் குரியதே சிகரெவர் நிகழ்த்திற்
பன்னு மாறெமக் கின்னமுண் டெனவவை பகர்வார். (௧௫௩)

அணிவெண் பூதிமற் றுருத்திர வக்கமஞ் செழுத்துத்
தணிவ ருஞ்சிவ நாமநூல் சாற்றுறு விரதம்
பணிவு றுஞ்சிவ புண்ணியம் பகர்சிவ புராணந்
துணிவு றுஞ்சிவத் துரோகஞ்சொல் லருஞ்சிவ் பூசை. (௧௫௪)

குரும கத்துவங் கூறுமெய்ஞ் ஞானத்தின் றன்மை
யருளு மீசனுக் கற்புத மாகுமீ ரைந்தும்
பொருள்வி ளங்கிடப் புகலுதி யெனத்தவர் புகலத்
தெருள கத்திய னன்னவ ருளங்கொளத் தெரிப்பான். (௧௫௫)

---

விபூதி.

அரந்தை தீர்தவ முனிவிர்கா ளறைகுவங் கேண்மின்
கரந்தை வார்சடைக் கண்ணுதற் கற்புதப் பத்திற்
பரந்த பூதிமுன் பகருதும் பல்லுயிர்க் கெல்லாம்
புரந்து காப்பதும் பரகதி யளிப்பதும் பூதி. (௧௫௬)

வேறு.

எந்தை யநாதி நிட்களமே சகளீ கரித்தின் றிறைவியையு
முந்தை முதல்வி யைந்தொழிலு மூன்றையி னீயே யளித்தியெனத்
தந்தம் முதல்வன் சுவேச்சையா யிருந்தா னந்தத் தனிமுதல்வி
யைந்து தொழிற்குங் காப்பாய்நின் னடையா ளந்தந் தருளென்றாள்.()

ன்னு முன்னந் தனைத்தானே யின்று தருமப் பெயர்சாத்தி
ன்னூர் கலையி னுயர்தருநல் லறமே நிகழ்த்துஞ் சிலகலைமுன்
ன்னு டவஞ்செய் பாற்கடலிற் பசுவா யுதித்தி யெனப்பணித்தா
ரங்கா ளதுசென் றடைந்துதிப்ப வமிர்தங் குடைந்தா ரரிமுதலோர்.

ந்தை சுரபி சுமனையெழி னலஞ்சேர் சுசீலை பத்திரையென்
றைந்து பசுவாய்ப் பாற்கடலு ளரனு ரருளா லவதரித்து
ழந்து சிவலோ கத்தடைந்து முயங்கு மிடபத் தொடுமிருந்த
ந்த வுலகங் கோலோக மதுவும் படிகத் தால்விளங்கும். ([illegible])

கோமா தாக்க ளாமவற்றைக் கூறுந் திருமா லயன்முதலோர்
ராமா தரவாற் பூசித்துத் தாழ்ந்து பணிந்து போற்றிவோர்
மாமா தவத்தீ ரவற்றினது பெருமை யெவரே வகுத்துரைப்பார்
ஆமா துறையு முலகிலவை யிருக்குந் தான மிகப்புனிதம். ([illegible])

துதிசா லந்தக் கோமயத்தை யெடுத்துச் சிவன்றன் லாகமநூல்
விதியால் விளைத்தங் கீறள்ளி மிளிர்தன் றிருநெற் றியிற்றரித்துக்
கதியார் பூதி யிதுவேகாப் பென்று விமலை கைக்கொடுத்தான் [ளால்.
மதியார் நுதலா டானணிந்தைந் தொழிலோ ரெவர்க்கும் வழங்கின

அருமா மறையின் றுணிவிதுவென் செருக்கா லுரைத்த தன்ற
ருள்சேர், பெருமா னுருவே வெண்ணீறு பேசிற் பிறிதொன் றிலை
ப்புவனி, புரிமா தவத்தா லிமையவர்க்கும் புகழ்ப்பூ சுரர்க்கும் பூசக
ர்க்குந், தருமா தரவாற் பசுக்கணெறி தழைக்கநிலத்தின்வந்தனவால்.

ஆவின் பெருமை யெவருரைப்பா ரவற்றின் சிருங்க மத்தியினின்
மேவுஞ் சிவனங் கிருபாலும் வேத னெடுமா லுறைந்திடுவர்
தாவி னுனிதங் குஞ்சர்வ தீர்த்த முயர்தா பரசங்கந்
தூவண் ணெற்றி தனிலமருஞ் சுடர்வேன் முருகன் கணபதியும். ()

மூசு நாசி யிருபுடையின் முயங்குஞ் சேட்டை மொய்செவியிற்,
றேசு பெறுநன் மருத்துவர்கண் ணிணையிற் றிகழ்செங் கதிர்மதிய,
மாசில் பல்லின் மாருதநா வருணன் வசிக்கு மூங்காரத், தோசை பெ
றுவெண் டாமரையா ளுறையுங் கபோலத் தியக்கர்நமன். (கசுச)

அதர மிரண்டிற் கந்தரத்தின் மகவா னமருங் குரநடுவிற்
றிதமா ரிசைக்கந் திருவர்நுனி சிறக்கும் பாந்தட் டொகைகுரமேன்
மதர்வா ளரிக்கண் ணரமகளிர் வருமா கணங்க ளினிதுறையும்
பதமார் தசநா டியினுமுருத் திரர்தா முறைவர் புறங்குறவே. (கசுரு)

பசையார் தருமென் சந்துகளின் பலவா யுக்க ளினிதமரு
நசையார் தருநான் முலையடியிற் பிதிர்தே வர்கணுன் முலைநுனியில்
விசையார் தரங்கக் கடலுளத்தின் மேவு முமைமின் னுதரத்தி
லிசையார் தருநன் னிலமகண்மால் வரைக ளிருங்கா னகமியையும்.

துனிநீள் வாலின் யோனியினிற் றங்குங் கமலை யுரோமமெலா
நனிசேர் தேவர் முனிவர்கண நணுங்கோ மயமே முதலைந்தின்
பனிசேர் மலரோ னுதிசதா சிவமீ றுறையும் பகர்பசுவின்
புனித மெவரே புகன்றிவோர் பொருள்சேர் வேத வடிவாகும். ()

தாவில் கபில நிறநந்தை தவளஞ் சுரபி மறையோர்க்கா
மேவு சுமனை நிறஞ்சிவப்பு விறல்சே ரரசர் தமக்குரித்தா
ேவ மகவுஞ் சுசிலைநிற மிசைதூம் பிரஞ்சொல் வசியருக்காம்
பூவி லுயர்பத் திரைகருமை பொங்கு நிறஞ்சூத் திரர்க்காகும்.(கசுஅ)

வேறு.

சாந்தி கம்பவுட் டிகந்தனிக் காமத மெனவு
மேய்ந்த மூவித மியம்புங்கோ மயமெடுத் திவற்றி
னுய்ந்த சாந்திகம் பிரமமோ ரைந்தினு லாவின்
போந்த யோனியிற் படாதுபூ மியின்விழா தேற்றே. (கசுகூ)

ஏற்ற கோமய மியம்புமந் திரத்தினுல் விளைத்தல்
சாற்றும் யோனியிற் றுக்கிநன் னிலத்தின்வீழ் மயத்தை
மாற்றி மேலொடு கீழ்நடு மயஞ்சடங் கத்தா
லூற்ற மேபெற விளைத்திடல் பவுட்டிக முரைக்கும். (களO)

புவியின் வீழ்மயம் பிராசாத மந்திரம் புகன்று
விவித மாமுழு வதுமெடுத் துரைத்தமுன் மனுவா
னவையு றுதவை விளைத்திடல் காமத நாதன்
கவுரி கேட்பமுன் னுரைத்தது கழறுவம் விரித்து. (களக)

ஒன்று கற்பமோ டநுகற்ப முபகற்ப மகற்ப
மென்று சிற்பர நீறுநால் வகைப்படு மிவற்றுட்
டொன்று கற்பத்தி னீற்றினுக் குரியதூய்ப் பசுக்கண்
மன்ற வத்திறம் புகலுவங் கேண்மின்மா தவத்திர். (களஉ)

ஈன்பெ றுக்கன்னி கொடுவைமூப் பிலக்கண மின்மை
வான்சி னைப்பசு வால்செவி கொம்பறை வந்தி
யான்ம லங்களைப் புசிக்குமா நோய்ப்பசு வீன்று
பான்மை சேர்பதி னைந்துநா ளுட்படும் பசுக்கள். (களங)

)றந்த கன்றுடைத் தாய்முடங் குருடிருஞ் செவிடு
றைந்த தீங்கெனத் தகையவீ ரெண்குறை யகற்றி
றைந்த நற்குண மழகுமுன் னிகழ்த்திய நிறத்தான்
றந்த பங்குனிச் சாலித்தாண் மேய்ந்தவை சிறப்பாம். (களச)

டியு முன்னெழுந் தனுட்டானம் விதிப்படி முடித்துப்
டிபு கழ்ந்திடும் பசுவுறை கோட்டத்திற் சென்று
டிவ மைந்தகோ சாவித்ரி யென்னுமந் திரத்தாற்
டிகொள் சந்தமுங் கமழ்நறு மலர்களுஞ் சாத்தி. (களரு)

)லங்கு தூபதீ பங்கொடுத் தினியதூ யன்ன
லங்கொள் பாகிலை நிவேதன நல்கிநற் பசுவைப்
லங்கொ ளன்பினுற் பணிந்தருச் சனைபுரிந் ததற்பின்
லங்கொண் மந்திரஞ் சதஞ்செபித் தேற்பர்கோ மயத்தை. (களசு)

ாலு மீருவர் வட்டமி சதுர்த்தசி கிரண
ால மின்னதில் விட்டகோ மயத்தையக் கணத்தி
றுலும் பூமியில் விழாதுமுன் னம்புய விலையா
லுலும் வாழைமெல் லிலைநறும் பலாசிலை யிவற்றுல். (களஎ)

துதும் யோனியிற் படாதுமே லாகவொண் சத்யோ
ாத மந்திரத் தேற்றுமேல் வழும்பினைத் தள்ளி
ாதி வாமத்திற் கவ்வியம் பெய்தகோ ரத்தாற்
போத நன்குறப் பிசைந்துதற் புருடத்தி னுருட்டி. (களஅ)

ன்னும் வெய்யவோ மத்தினிற் பதடியோ டமைத்து
றன்னு ளைத்திடு மகோரத்தால் விளைவித்து மொழிந்த
பிங்கி லந்தொழும் பாகங்கண் டீசானத் தெடுத்து
ன்ன லந்தரும் புதியதூ யாடையின் வடித்து. (களகூ)

ங்கு பொன்வெள்ளி தாமிர பாத்திர மடைவிற்
வங்க வுத்தம மத்திம மதமமுஞ் சொல்லு
பிங்கி தன்றியு மண்சுரை பித்தளை யிவையும்
ங்க மில்லதாம் விளங்குமப் பாத்திரத் தமைத்து. (கஅ0)

ண்ண் வெண்பொடி யிறையுரு வெனமனத் தெண்ணி
ண்ண ரும்பஞ்சப் பிரமநற் சடங்கமு நயந்தே
யெண்ணு தற்கரும் வியோமவி யாபியென் றிசைக்கு
ண்ணன் மந்திர மிவற்றிை கமவிதி செபித்து. (கஅக)

நறிய சண்பகங் கேதகை பலாசம்புன் னாகஞ்
சிறிய சண்பகந் தாமரை துளவுபா திரிப்பூ
வெறிக ருப்புரம் வெட்டிவேர் மருவிலா மிச்சுக்
குறிகொண் மல்லிகை தக்கோலங் கொழுந்துநா யுருவி. (௧அ௨)

தருப்பை யின்னுனி யாகமஞ் சூற்றுமற் றெவையுந்
தெரிப்ப ருஞ்சத்யோ சாதமீ சானமுஞ் செபித்து
மருப்ப யின்றவெண் பூதியுண் மணங்கொளச் செறித்து
விருப்ப முற்றுவெண் ணீற்றின்கா யத்திரி விளம்பி. (௧அ௩)

சுத்த மாகிய நிலத்தில்வைத் தணிமலர் சூட்டிப்
புத்தி யீதென வண்டுகில் வாயினிற் பொதிந்து
பத்தி சேர்கவ சத்தவ குண்டனம் பண்ணி
யத்தி ரந்தெறித் துத்தேனு முத்திரை யடைவாய். (௧அ௪)

மூலத் தாற்கொடுத் திடுவரம் முழுவெண்ணீ றெடுக்கி
னேலத் தாஞ்சிவ மந்திர முச்சரித் தெடுப்பர்
ஞாலத் தார்தொழும் பெரியர்முற் கற்பநா நவின்றோருஞ்
சீலத் தார்பஞ்ச வில்வத்தால் விளைத்தலுஞ் செப்பும். (௧அ௫)

கற்ப மித்திற முத்தம மிருத்தலுங் கருதி
யுற்ப னத்தொடன் றெடுத்தகோ மயத்தையன் றுருட்டி
யற்பி னுக்கினுஞ் சென்றுவே றுணக்கியே யடினு
நிற்ப தப்பெய ரநுகற்ப நிகழ்த்துதுங் கேண்மின். (௧அ௬)

இணங்கு சித்திரைத் திங்களிற் செறிவனத் தெய்தி
யுணங்கு நன்மயங் கொணர்ந்திடித் துரியகவ் வியம்பெய்
தணங்கொர் பாகனன் றறைந்தமுன் மனுப்படி விளைப்பார்
கணங்கொண் மாதவத் திருப கற்பத்தைக் கழறில். (௧அ௭)

இலங்கு நீள்வனத் துணங்கிய மயங்கொணர்ந் திடித்து
நலங்கொள் கோசல மொன்றுமே பெய்துமுன் னவின்ற
வலங்கொ ளாகம விதிப்படி மனுமொழிந் தலைவின்
பலங்கொ ளப்பிசைந் துருட்டிவைத் தெடுப்பர்டாங் கறிந்தோர். ()

அகற்ப மாவன வனத்திற்று பாக்கினி யதனல்
விகற்ப மின்றியே யியற்கையின் வெந்தவெண் பொடியை
யுகப்ப வேகொணர்ந் தானைந்தும் பெய்துமுன் னுரைத்த
வகைப்ப டிந்திறன் மந்திரத் துருட்டிவைத் தெடுப்பார். (௧அ௯)

ான்ற நூல்புகல் சர்வசங் காரகா லத்திற்
்றுன்றும் யாவுந்தன் னுதல்விழி யங்கியாற் றொலைத்து
ான்ற வார்குழை பாகனம் மயானத்து நடித்தா
ுன்ற நீறெலாந் தோய்ந்திட மேனியி லவற்றை. (கசு0)

ிருக்க ரத்தினல் வழித்தெறிந் தனன்றிகழ் விடைமுன்
ிருப்பி னுலவை யயின்றந்த விடைதன்வீ ரியத்தை
ருப்ப மீக்கொளப் பசுக்கள்பால் விட்டதப் பசுக்கள்
ெருக்கு கோமயம் விபூதிக்கு விசேடம்பே சினவால். (கசுக)

ற்றின் மிக்கது கோமயத் தாக்குவெண் ணீறே
யற்ற மாயின தாதலிற் காரண மிசைத்தே
ாற்றல் சான்றிடு முனிவிர்கா ளாதியோ டந்தந்
தாற்ற மீறிரண் டிற்குங்கா ரணந்தொகு பூதி. (கசுஉ)

வத ராதிய மூவர்க்கும் விமலனு லயத்து
மாது சூத்திரர்க் குயர்மடப் பள்ளியி னகத்து
மதந் தீர்குறை யேனையர்க் கடவித்தீ யிடத்தும்
பாத வாக்கிய நீறுரித் தாமெனப் புகலும். (கசுக)

ரவு நீலந்தீப் பிணிசிவப் பிசையின்மை பகர்தூம்
ிரகி றத்தவா யுகந்தெறும் பீதநல் குரவா
ிரவு மித்திற நிறம்படா தெடுத்திடு நீற்றி
னுரவு வெண்ணிற மெண்ணிலாப் புண்ணிய முதவும். (கசுச)

அங்கு லம்மொரு பானிரண் டியரத்தி னகலந்
தங்கு மெட்டள வாடையாற் றனிப்புலித் தோலாற்
பொங்கு கான்பிணை யுரிவையாற் பொருந்தவாய் வட்டந்
துங்க நீறடைத் திடுமொரா லயஞ்செய்வர் தூயோர். (கசுடு)

பூதி யாலயஞ் சத்தியன் னதிற்புனை தருநூ
லாதி நான்முகன் பந்திக்குங் கயிறுமா லதனுட்
உது தீர்தர வுறைவெண்ணீ றருட்சதா சிவமாம்
வேத வாகம மித்திறம் புகன்றிடு மெய்ம்மை. (கசுசு)

ஒருகை யிற்கவர்ந் தனதுகிற் றலையின வொருவர்
கருவி லைக்குவாங் கினவதிக் கையரிளித் தனமுன்
கருது பூதிகங் கவிழ்ந்துமங் காந்துங்கம் பித்துந்
தெருநெ றிப்பட நடந்தும்பூ சினதருந் தீங்கு. (கசுஎ)

அந்த ணாளர்தம் பதாந்தமே யளவுமுத் தூளம்
வந்த காவலர் நாபிமேல் வணிகரா யவரு
மூந்து பட்டம்போன் மூவிரற் கொண்டெழுத் தாகச்
சிந்தை செய்துசூத் திரரணி குவர்விதித் திறத்தால். (௧௯௮)

நுதலு ரம்புய நுவன்றிடு கெடுமைநீற் றளவை
மதிகொண் மூவிரு விரற்களா மற்றவற் றென்றூந்
துதிகொள் சென்னிக்குங் காதிற்குந் தொடுதலே போதும்
பதிகொண் மூவிரற் படவணி குவர்பக ருறுப்பின். (௧௯௯)

வளைத லுங்கடு விழுத்தலும் வன்மையு மாசு
மளவி யொன்றெடான் றுறுதலு மறப்பிரிந் திடலும்
விளையு மூவிரு தீக்குணம் விளங்கநீ றணிந்தா
லுளைவு றுங்குறை யிலாதவர்க் கலக்கண்வந் துறுமால். (௨00)

பூசை மந்திரந் தியானநூல் புரிதவம் வணக்கம்
பேசு நீறின்றிப் பிறங்குமெக் கிரியையுஞ் செய்யார்
மாசி லந்தணர் மகத்தினுக் கனைத்தும்வந் துறினுந்
தேசு றும்விதித் தீயின்றி முடியுமோ முடியா. (௨0௧)

அரவன் முன்னுநூ லறைதரும் யாகத்தின் முன்னுங்
குரவன் முன்னுநீ றணிவது தீதவை குறியார்
பரவு பூதியோ ரணுத்துணை பாரிடை வீழ்ப்பின்
விரவு மெண்ணிலாக் கற்பங்கள் வெந்நர குழப்பார். (௨0௨)

தொகுத்த வாழ்க்கையாற் பூதியுஞ் சோதிமேற் றலாற்
பகுத்த நூல்புகல் பசிதமும் படுமலம் பிணிமா
சுகுத்த லானுயர் கார * முங் காத்தலாற் காப்பு
மிகுத்த தீதுநீற் றிடுதலா னீறும்பேர் விளம்பும். (௨0௩)

சிரத்த ணிந்திடிற் கழுத்தள வுறுபவந் தீரு
முரத்திற் பூசிடி னுள்ளத்தால் வரும்பவ மொழியுந்
தரிக்கி னுபியி னிலிங்கத்தால் வருபவந் தணியும்
பொருத்து பாரிசத் திடின்மடந் தையர்ப்புணர் பவம்போம். (௨0௪)

குதத்தி னுக்குமேற் பூசிடிற் குதத்துறு பவம்போம்
விதித்த திண்புயத் திடிற்கையாற் செயும்பவம் வீடுங்
கதித்தி டும்முழந் தாளினி லணிந்திடிற் காலான்
மதிக்க வேவரும் பவங்கதிர்ப் பனியென மாறும். (௨0௫)

---

* க்ஷாரம் என்னும் வடமொழி காரமென்றாயிற்று.

கத் தாலுறு நீற்றினை யின்னமும் பகர்வாம்
கத் தானவெண் ணீறுநால் வருணர்க்கு மிடலா
ாகத் தார்வினை களைதரு மீதன்றி முதன்மை
கத் தார்தொழு மியற்கைநீ றதிகுய்யம் வழுத்த. (உOசு)

வ பூத்தன னழல்வடி வியற்கைவெண் ணீற்றைப்
றுு நல்குவோன் மூலகா ரணம்பெரி ததெனு
று பல்லுயிர் நரகுறு வாறுமென் மருந்தாய்க்
றி னன்கரத் தால்வழித் தம்மைகைக் கொடுத்தான். (உOஎ)

ரித ரும்புகழ் நீற்றினை யறிந்துமே லணியா
தி னற்றறீர் பதிதராய் விடுவரந் தணர்க்குஞ்
ந்தி யோதுநீ றிடாமுகஞ் சுடலையம் முகத்தைக்
ந்தி நோக்கினு றஞ்செழுத் தோதுவர் கற்றோர். (உOஅ)

வேறு.

லவா யெல்லையினு ளகப்பட்ட சாம்பரிவற் றதிகங் காழிப்
லனூர் பூழியன்வெப் பமணழித்து வாதுவென்ற பான்மை யாலு
ாலமேழ் பரவுசிவ சைவசம யம்பொருளா நாட்ட லாலு
லவார் குழல்பாகன் றென்மதுரைக் காகுச மின்மை யானும். ()

எந்நீறு பூசினுந்தென் னலவா யான்றிருநீ றென்றே பூசிற், ப
னூறு கோடிசன னத்தறிந்து செய்தகொடும் பாவந் தீரு, முன்
று படுத்தவரு நமனையுங்கா னூர்முடிவின் முத்தி சேர்வார், நன்
று தனையணிந்தோர் பெற்றவா சிலவுமக்கு நவில்வாங் கேண்மின்.

முன்னமொரு பிரளயத்து நான்முகனு தியரொடுங்க முராரி
ன்மேற், றன்னகந்தை மிகுந்திருப்ப வவனுதலிற் சங்கரன்வெ
ணீறு சாத்த,மன்னகந்தை நீங்கியவண் மோகினியாய் மருவியுந்தி
னசத் தின்று, பின்னொருநான் முகனையும்பே றறிவும்பெற்றான் பி
தில்சிவன் பொருளென் றெண்ணி. (உகக)

மையுறு பிரமராக் கதனொருவன் பாதகமே செய்வான் முன்னர்
மதே வப்பெயர்மா த்வனஞுகக் கண்டறிவு வரலுந் தாழ்ந்து
மநீ றெளிருமவன் மேனியைத்தன் மேனியினுற் றழுவி வேனுங்
முறுநல் லுருப்பெற்றுப் பூதியுமெய் யணிந்துசிவகதியும்பெற்றான்.

தென்னவனுட் டொருமறையோ னயன்மாதைச் சேரவவள்
காழுநன் சீறி,யன்னவனு ருயிர்செகுத்தீர்த் தாவணத்திட் டான்
டக்கு மவனீ ணெற்றி,தன்னிலடலையிற்கிடந்த சுணங்கன்கா ஞீ

றுபடத் தரித்த லாலே,கொன்னுறுவே னமன்படரைத் துரந்துகணம் விடக்கயிலே குறுகி னுனல். (உகரு)

தன்னையறி யாதுடலி னீறுபரி சித்தோரித் தன்மை பெற்று ரென்னிலறிந் தணிந்தோர்கள் பெறும்பயனிவ் வளவையென விசை க்கற் பாற்றே, பின்னுமதிச் சடைமௌலிப் பெம்மானே யவர்வே றுபிறிதொன் றன்று, லன்னவரை நரனென்போர் நரகாழ்வ ரமல னென்போ ரரனே யாவர். (உகச)

வேறு.

இயம்பிய நால்வகை நீறு மிங்கிவை
வயம்பெற வணிந்திடு மாறு மாறிலா
வியம்பெறு புண்ணிய விளைவுஞ் சொற்றன
நயம்பெறு கண்டிகை நவில்வங் கேட்டிரால். (உகரு)

---

## உருத்திராக்கம்.

வேறு.

திரிபுர ரெனும்பே ரவுணராற் சிதைந்து சிந்திய மான்முதற் றே வர், புரிதரு தவமோ ராயிரம் வருடம் புரிந்திட வியந்துபோய்ப் புராரி, யரிதிதென் றிரங்கிக் கண்ணிமை யாது பார்ப்பமுக் கண்ணி னு மமைந்த, விரிதுளி தாழ்ந்து கண்டிகை மரமா யெழுந்தது விழுந் ததொண் புவியில். (உகசு)

அன்றுதொட் டுருத்தி ராக்கமென் பெயர்மூப் பானதெனெட்ட பேதமாம் வெண்மை, யொன்றிய சிவப்பவ் விருநிறங் கலத்த லுரை த்திடுங் கருமையிந் நான்கின்,றென்றுநான் மறையோன் வெண்மை மன் சிவப்புச் சொன்னிறங் கலந்தது வணிகன், வன்றிறற் கருமை சூத்திரன் சாதி வருணநால் வர்க்குமிவ் வகைத்தாம். (உகஎ)

ஒருமுகஞ் சிவன்றன் வடிவுநான் மறையோர்ச் செகுத்ததீங் கொ ழித்திடு மிரண்டா,வருமுகஞ் சத்தி சிகும்பசு வதைத்த வன்பழி மாற் றுமும் முகந்தீப்,பெருகுபெண் கொலைநீத் தருளுநான் முகனுன் முக ன்பிழை நரகத்தி போக்கு, மருமையைம் முகங்கீர் லாங்கிருத் திரனு னுரித்தலர்ப் புணர்ச்சிபொய் யகற்றும். (உகஅ)

அறுமுகன் வேலன் வலக்கையி லணிவ தகன்றிடும் பிரமகத் தியுமே, ழுறுமுக மனந்தன் கோக்கொலை யொடுபொற் களவினல்

ருபவ மொழியு,மறுவிலெண் முகம்வா ரணமுகன் குருபன் னியை
தொடல் வருதுலே முதலாப், பெறுபல தானம் பிறன்கையி லன்ன
மற்றிடும் பீழைநீங் கிடுமால். (உகக)

இயம்பிய வொன்பான் முகம்வயி ரவனு மிட்க்கையிற் றரிப்ப
வன்பார், வயம்பெறு தக்க கன்முத லரவம் வதைத்தல்போ முத்
யு மெய்து, நயம்பெறு மொருபான் முகந்திரு நெடுமா ணுளொடு
காள்பெரும் பூத, முயங்குபேய் பிரம ராக்கதன் மற்று முடற்றிடும்
பெரும்பய மொழியும். (உஉ0)

பதினொரு முகம்பன் னோருருத் திரராம் பகர்பரி மேதமா யிரம்
ன், னிதியொடு கோதா னம்மொரு நூறு யிரந்தரு பயன்களை நிறை
குங், கதிகொள்பன் னிருமா முகங்கதி ரொருபா னிரண்டதாங் கா
ஞ்சன மேரு, விதிதரு தானம் புரவியச் சுரபி மேதநல் கியபயன் றரு
மால். (உஉக)

செறிதரு பதின்மூன் றுமுகங் கந்தன் சிந்தையில் வேட்கைபொன்
னிரத, நெறிதரு சயமு மளிக்குநற் றுணைதாய் தந்தையர்த் தெறுங்
கொலை நீக்குங், குறிதரு பதினான் முகஞ்சிவஞ் சத்தி கூறும்விண்
ணவர்தவ ரிறைஞ்ச, வறிதரு வசிய நல்கியூ ழியினு மழிதரா வுலகி
லுய்த் திடுமால். (உஉஉ)

கிளத்திய பதினான் முகம்பெற லரிது கிட்டுமேற் கண்டத்திற் றரி
ப்ப, துளத்தினி னீங்காச் சிவன்சத்தி மந்தி ராதியு மேய்ப்பதொண்
முத்தி, விளைத்திடும் பதினைம் முகம்பர நாதம் விளம்புமெய் பாவமும்
வீட்டுந், திளைத்தெழுங் கருணைச் சோதியோ டொன்றித் தீர்விலா
முத்தியிற் சேர்க்கும். (உஉ௩)

நீசராங் குணுங்கர் குணுங்கர்கன் னியரு னெறியிலா மதுமுதல்
புசித்தோர், ரீசனு ரருட்கண் மணிசிரந் தரித்தா லிருவினை தொலைத்
தர னவர், மாசிலாக் குலத்த ராயினு மீசன் கண்மணி வனேந்திடார்
சேர், சீசியன் னரைத்திண் டிநுமதி பாவ மணிகிலா ரலக்கணுர் தெ
ரிப்பார். (உஉச)

வேறு.

உச்சியிலொன் றணிசிரத்தி னொருமுப்பத் தாறெண்ணான்
கொள்ளிர்கண் டத்தி, லிச்சையுறு செவிக்கவ்வா றுரத்திலேம்பான் கை
த்தலத்தெண் ணிரண்டி ராறும், விச்சைதரு மணிக்கட்டிற் றுழ்வட

ங்க ணூற்றெட்டும் விளங்கச் சாத்தி, நச்சிநடந் திடுமடிக்கோ ரய மேத நவிற்றிவுருத் திரனே யாவர். (உஉரு)

காணினுமக் கண்டிகையின் பயனிலக்கம் பரிசிக்கிற் கோடி க ண்டு, பூணினுமா யிரங்கோடி செபத்தனந்தம் பயனிமையோர் பூசைக் கேற்ற, தாணுவைப்போ லுவர்பகைக்குந் தாழ்ந்தடங்கார் கணந்தரிக்கிற் சுணங்கற் கேனு,மாணுறுநற் கதிகொடுக்கும் புகழ்ந் ணிந்த மானிடர்க்கென் புகல்வ தம்மா. (உஉசு)

சிகையினிற்கண் டிகைதரிக்கிற் பயன்கோடி திண்செவியி லொரு பான் கோடி, மிகையறுகந் தரத்தினிலா யிரங்கோடி மிளிர்கரத்தி லனந்த மாகும், பகைதருவெந் தீவினைக ளெத்தனைசெய் தோருமிது பரமென் றெண்ணித், தொகைபெறுநாட் கழித்திறுங்கா லருந்துவ ரேற் பிறப்பவரைத் தொடரா தம்மா. (உஉஎ)

நீங்கரிய முப்புரிநூ லின்றிமறை நிகழ்த்துவதெவ் வாறவ் வாறே
தாங்கரிய கண்டிகையும் புண்டரமுந் தரித்திடுமந் தணருக் கேனு
மோங்கியிடத் தவ்வாது தரித்திலரே னீராட லோத லீதல் [தால்.
பாங்குபெறத் தென்புலத்தோர்க்குதவுதலர்ச்சனைமற்றும் பயன்பட

கண்டிகையணியா யிரந்தரித்தோர் சிவனெனமான் முதற்றேவர் கரு திப் பூசை, பண்ணுவர்மா முடிதரித்து மூழ்கியிடிற் கங்கைபடி பல னுங் காதி, லெண்மணியை முழுதுமணிந் தவர்மூவேழ் சுற்றமிடர் நரகு நீங்கு,மொண்ணவமா மணிபடிகம் பொன்னிடைகோத் தணி யிலவ ருறுவர் முத்தி. (உஉகூ)

ஏகமுக மைந்துமுகம் பதினொன்றே ழிரண்டுமுக மிவற்றை யெண்ணி, வாகுறுமஞ் சனம்புரியா தன்பினொடு முளமிரங்கி வழுத் தி யீச, னாகமநூல் விதியினருச் சனைசெய்வோர் செல்வமுத்தி யடை வர் நாரி, பாகனுருச் சின்மயமா மணியணிந்தோர் பெற்றகதை பக ர்வாங் கேண்மின். (உங௦)

நந்தியெனு மொருநகர்வா ழீசனு லயத்தடிச்சி நந்தைப் பேரான், விந்தைசெறி சேவலொன்று வானரமொன் றீற்குமணி மிலைந்து தானும், புந்தியுறத் தரித்தவற்றோ டரன்கயிலை யடைந்தனள்போய்க் கழுதை யொன்று, நந்துமணிப் பொதிசுமந்து விந்தையினி லிறந்துக ற்பங் கயிலை நண்ணும். (உங௧)

புட்கரதே யத்துமன்னன் சவுமியன்றன் மனையொருவிப் பொய்ம்மை மாதர், நட்புறுவா னவன்மனைவி வசுமதியும் வேள்கணையா னலிந்து வாடிக், கட்புலனீ ரொழுகவரும் துறுவாள்கண் மணிதரித்தக் கணவற் சேர்ந்தாள், கொட்புறுமம் மனன்றரித்தொன் ஞர்புவியுங் கொண்டனன்போய்க் கயிலை புக்கான். (உகூஉ)

கனைகழன்மே ஞட்டரசன் குமரைக்கண் ணன்கால ஞானியென்னு, மனைவியொடு மிகலிநீ பதியெனக்கு நிற்குநான் மனைவி யாவேன், புனைசுவர்ச்சித் திரமாயன் புகலிலென வவன்கண்மணி பொருளென் ருேத,வனையன்மட வரலாகு னவள்புருட னுள்சேர்ந் தரன்ருள் சேர்ந்தார். (உகூக)

உருத்திரவக் கம்புனைவோர்க் கனமிடும்வே தியன்சுப்ர தீபனுங்கு, மருத்தியிஞ லவனருளால் விண்ணகர்போய்த் தருக்கொணர்ந்தே யளிக்கும் பூனை, வருத்துபசி யால்வந்த மறையவஞே டிகலுமறு சமயி யான,விருத்தமறை யோகாங்கன் கண்மணிபூண் டரன்கயிலை மேவி ஞரால். (உகூச)

மிளிர்கலிங்க நாட்டுவியாக் கிரபுரத்தோர் வேதியன்சா மித்ரனென்போன், களவின்மேம் பட்டோன்பல் லுயிர்செகுத்தோன் வளர்த்தமறைக் கள்ளத் தாதை, தளர்வுறவே செகுத்தயன்மா தைப்புணர வன்னள்கிளை தடிய வீந்தான்,றிளைதரநா லாநாளிற் காகமணியுடல்வீழ்ப்பக் கயிலை சேர்ந்தான். (உகூரு)

மாகரநாட் டுறையுமொர்வே தியன்மதலை சாந்திகனோர் மணிமேற் பூண்பரன், சாகரநாட் டரசுகொளத் தான்காளி நரபலிக்கு விலைப்பட்டேகி,யாகரநாட் டதுவிலக்கி யவ்வரசன் மகளைமணந் தரசா யிந்து, சேகரன்கண் மணியணிவித் தவன்கிளைதன் கிளையொடும்போய்க் கயிலை சேர்ந்தான். (உகூசு)

அக்கமா மணியணிந்தோர் பெற்றகதை யிற்சிலநா மறைந்தோமம்பொன், மிக்கதா யிரம்வெள்ளி யியன்றவற்ருற் பொதிந்தவற்ருல் விளங்கும் பின்னற், றெக்குறுகம் பியிற்கோத்துப் பெரிதணிந்தோர் முப்பொருளுந் தெளிந்த தூயர், தக்கமணி யணிந்தோரைச் சிவமெனவே பாவிப்போர் தக்கோர் தாமே. (உகூஎ)

உரைத்தனமா மணிப்பெருமை படிப்பவர் துண்மையென வுவந்து கேட்போ, ரிரைத்தநதிச் சடையோனை நிகர்ப்பர்மணி வெ

ண்ணீற்றே டியைந்து பூண்டு, நிரைத்ததிரு வஞ்செழுத்தை யுச்சரித் தந் நிலையுணர்ந்தோர் நேர்மை யாரே, வரைத்துரைப்பா ரறிந்தவா தொகுத்திசைப்பே மென்னமுனி வரர்க்குச் சொல்வான். (௨௩௮)

பஞ்சாக்கரம்.

வேறு.

அருளை யஞ்செழுத் தாக்கியே யம்பிகைக் கமலன்
பொருள்வி ளங்கிடப் புகன்றதிம் மந்திரம் புகல்சற்
குருவ றிந்துளந் தேறுறத் தெளிப்பதாங் குணித்து
வருப யன்பெற வுணர்ந்துளோர் பேற்றையார் வகுப்பார். (௨௩௯)

அஞ்செ ழுத்தினு ளோரெழுத் தின்பய னளவை
கஞ்ச நாண்மலர்க் கண்ணனுங் கண்ணனுங் காணார்
செஞ்ச வேபிர ணவத்தொடுஞ் சேர்த்தியுச் சரிக்கிற்
பஞ்ச பாதக ராயினும் பரனெனப் படுவார். (௨௪0)

இன்ன வஞ்செழுத் துணமவி னுமுயிர் சென்று
பன்ன காபர ணன்பதஞ் செறிந்திடும் பரிசா
லன்ன மந்திர மேபரப் பிரமமா துணர்ந்து
மன்னு வோர்நிழற் படினுங்காண் கினும்பவ மாறும். (௨௪௧)

மூன்று காலமு மாலயத் தணுகிமுக் கணன்று
ளூன்றி யேதொழு துள்ளத்தவ் வஞ்செழுத் தெண்ணிற்
றோன்று புண்ணிய மியாவும்வந் தடங்குந்தொல் வினைபோ
மேன்ற பார்புரந் திருங்கதி மூவரிற் பொலிவார். (௨௪௨)

வேறு.

மந்திரித்த லிறையெட்டுப் புத்திரசீ வத்தொருபான் மணியாஞ் சங்கி னந்தமொரு நூறுபளிங் காயிரமுத் திலக்கநறு மரையின் கோடி சந்திரத்திற் பதின்கோடி குசைமுடிப்பா யிரங்கோடி தானு வான முந்துசிவன் கண்மணியின் பயனனந்த மெனவேத முடிபுசொல்லும்.

வளமனையி லொன்றுபசுத் தொழுவினொரு பதுநதியின் மருங்கு நூறு, கிளர்தருமா லயத்தினுளா யிரம்வனத்து ளிலக்கமுயர் கிரியிற் கோடி, முளைமதிச்செஞ் சடைமவுலி திருமுன்ன ரளப்பில்பயன் முற் றும் பெற்ற, வுளமுறவஞ் செழுத்தாதி கண்மணித்தா ரெடுத்துண ர்ந்துச் சரிப்போர்க் கம்மா. (௨௪௪)

திரைத்தகடற் புவிபோற்று மஞ்செழுத்தைச் சிந்தைசெய்து தெளியப் பெற்றோ, ரிரைத்தமறை யாகமநூல் விதியறிந்து செபிப்பர்முறை யியல்பு கூறி, னிரைத்தசெப வடங்களோநூற் றெட்டென்று மதிற்பாதி நிகழ்ந்த தென்று, முரைத்திடுவ ரதிற்பாதி யளவென்று மின்னுமுரைத் திடுவாங் கேண்மின். (உசரு)

முத்திநெறிக் கையைந்து சோபனத்திற் கியம்பியமூ வொன்பான் கூறு,மெத்துநிதிக் கொருமுப்பா னபிசாரத்தொழிற்கு மேவைம்மூன்று, வித்தன்மணி வடந்தொடுப்பின் மேற்குமேல் கீழ்க்குங்கீழ் மேரு மேலாய்ப், பத்திபெற வொன்றுபடுத் திடைமுடிந்து தொடுப்பர்பரம் பரனூல் கற்றோர். (உசசு)

உடல்வெறுத்தான் மேல்போக்குங் கீழ்போக்கு முறுபோகஞ் சார்வான் மேரு, வடைவுபெற விலங்கியா தனுமிகையே மத்திமைதர்ச் சனியங் குட்டங்,திடமுறவே வட்நடத்திற் பிணியறலுந் தனம்புகலுந் தெவ்வர் மாய்ப்பு, மிடரறுநன் முத்தியடை தலுமடையு மென்பர்கதிக் கிலக்கஞ் சொல்வார். (உசஎ)

வேறு.

இனைய தாகிய வஞ்செழுத் தெண்ணியே
வினையி னீங்கின ரெண்ணிலர் மேதக
வனையர் பெற்ற வருங்கதை யிற்சில
முனைவிர் கேட்குதி ரென்று மொழிகுவான். (உசஅ)

வேறு.

மதுரையம் பதிவா ழெதுகுல மன்னன் றசாருகன் காசிமன் மகளாம், புதுமதி வதனக் கலாவதி மின்னை வேட்டனன் புணர்ந்திடப் புகுங்கால், விதுநதி வேணி யஞ்செழுத் தோதி மேவெனக் கர்க்கர்பால் வினவிக், கதுமெனக் கொடியாய்ப் பவங்கரிந் திடப்போ யவட்புணர்ந் தடைந்தனன் கயிலை. (உசகூ)

இல்லறத் தினிலஞ் செழுத்துணர்ந் திருக்கு மியன்மறைத் தருமனே டிகலிப், புல்லறத் திரியோகி சந்திர னில்லிற் றுறவதே பெரிதெனப் புகன்று, மல்லல்கூர் மகவான் மலரய னிவரை வருவிக்குந் தருமற்குத் தோற்றிற, யொல்லையன் னவற்றூழ்ந் தஞ்செழுத் துணர்த்த வுணர்ந்தில்வாழ்ந் துறைந்தனர் சிவன்றாள். (உருo)

சூரிய சன்ம னென்றொரு மறையோ னனந்தன் புணர்ப்பினுற் சுதனைச், சிரிய பசுவை மருகியை யறியான் வதைப்பவச் செழுங்கவு

சிகநாட், டேர்பெறு மறையோர் சிறமுன் கோயி லிடப்பம்புற் றின வளித் திறந்தோ, ராருயிர் பெறக்காட் டினன்கதி யடைந்தா னஞ் செழுத் துண்மையா லறிவான். (உ௫௧)

வேறு.

அஞ்செழுத் தியலு மோதி னவர்பெறு பயனுஞ் சொற்றும்
விஞ்சுநீ றுருத்தி ராக்கம் விளம்புமந் திரமேற் கொள்வோர்
நஞ்சணி கண்ட ஞம நாளுமுச் சரிக்க வேண்டுந்
தஞ்சென வினிது கேண்மின் சாற்றுது மென்று சாற்றும். (உ௫உ)

---

சி வ நா ம ம்.

வேறு.

அரகர கங்கா தரமணி கண்டா வலர்பூமன்
சிரகர தந்தா வளமுகர் தந்தாய் சிவனேமுப்
புரகர மைந்தா ரரவம ணிந்தாய் பொருளேயென்
றுரகர ணந்தா னுறவுரை தந்தார் சிவனவார். (உ௫௩)

பகன்மதி யம்பக வுயர்கிரி யம்பக பராகாதந்
திகழ்பர விந்துவி னுருவமை சுந்தர தெளிகூடற்
சுகநிற வந்தரி யொருபுடை தங்கிய சொக்கேயென்
றகமகிழ் தந்தொரு பொழுதுமொ ழிந்தவ ரரனவர்.(உ௫௪)

முழுத்தவர் சூழ்கரு ணாகர வாகர முதலேயைந்
தெழுத்துரு வாகுந டேசச தாசிவ விறையென்றே
வழுத்தினர் நாமவெ ழுத்தொன் றிற்கிறை வடிவாவ
ரழுத்திய மற்றையெ ழுத்தரன் மேற்றனி செனவாகும். ()

வேறு.

ஈண்க் கொடும்பா தகரேனு மொருகா லீசன் பெயரிசைக்கின், ஞானக் கடன்மூழ் கியதவத்தோர் நாடுஞ் சிவனே யெனப்படுவார், வானத் தவர்போற் றருநாமம் புகன்றோர் பெற்ற வன்சரிதை, மோனத் தவமா முனிவீர்காண் மொழிவாங் கேண்மி னெனமொழிவான்.

கலிங்க நாட்டில் வீரியனென் றொருநான் மறையோன் கமழ்ம துவூ, னிலங்க வயின்றும் விலைபகர்ந்து மீனப் புலைச்சி தோடோய்ந் தும், வலங்கொ ணெறிநீத் திறக்குங்கா ன் மதுவின் விலையோர் சிவ மென்றான், புலங்கொ ளீசன் கயிலையிற்போய்ப் புனித னுருப்பெற் றிருந்தனனால். (உ௫௭)

